தியிற் பரவசமானுர்; பின் தெளிந்து உலகத்தார் அப்பாடலைப் படித்துப் பாடி உய்தல் கருதிப் பெருங்கருணைகொண்டு, பாடலை ஒவ்வொன்ருகக் கீழே நழுவவிடுத்தார். இதுதான் இவர் பாடிய பதினுயிரம் பாடல்கள் சிதறுண்ட காரணம். எவரெவர் காப்பாற்றிக் கொடுத்தனரோ அவைதான் தற்போது வெளிவந்துள, மற்றவை மறைந்தன. ஆசிரியர் பாடி முடித்தாய்விட்டதாயினும் கோரிய தரிசனத்திற்கு முருகன் இன்னும் கருணை செய்யவில்லை. அதனுல் ஆசிரியர் உடலை விடுக்க முன்னரே தீர்மானித்துள்ளபடி கீழே குதிக்கத் தாவி விட்டார். கருணையங்கடலாகிய நமது முருகப்பெருமான் தமது இருகரங்களில் ஆசிரியரைத் தாங்கி மீண்டும் உலகத்தாரின் காரணமாக அவருக்கு அணிமாதி சித்திகளும் அநுக்ரகித்து மறைந்தார்; இவ்விதமாகவே ஆசிரியர் சிலகாலம் கூன், குருடு, செவிடு, முதலியவைகளைச் சொஸ்தப்படுத்தி தீராப்பிணிகளைத் தீர்த்து மற்றும் பல அற்புதங்களும் செய்து கொண்டுவந்தார்.

இஃதிவ்வாறிருக்க, வில்லிபுத்தூரார் என்பார் ஒருவர் தமது கல்விச்செருக்கால் புலவர்களை யெல்லாம் வரவழைத்து வாதில் வென்று தோல்வியுறச்செய்து அவர்கள் காதுகளை அரிந்து கொண்டுவந்த விஷயம் ஆசிரியர் கேள்விப்பட்டார். இதைக் கேட்டதும் ஆசிரியர் சற்றும் மனம் சகியாதாராகித் தாமே நேரில் அவரிடம் போய் அவ்வாழ்வாரை வாதில் வென்று அவர் காதை யறுக்காது கர்ணதானமும் மற்ருேர் காரணத்திற்காக கண்தானமும் அருளினுர். இந்த நிலையில் ஆசிரியரின் கீர்த்தி, பிரதாபம், தயை, அநுக்ரகம், புகழ் முதலியன பரவின. அப்பால் இவரைப் போற்றுவாரும் பின்பற்றுவாரும் மிகுந்தனர்.

திருவண்ணுமலையிலே சம்பந்தாண்டான் என்னுமோர் மந்திரவாதிக்கு இவ்விஷயம் எட்டியதும் அவன் இவரை உயிருடன் காணவும் மனம் பொருணுகி அக்காலம் அவ்வூரை அரசாண்டவனும் மந்திர சக்திக்காகப் பயந்து தன்னிடம் கட்டுப்பட்டவனுமான பிரபுடதேவ மகாராஜனிடம் நமது ஆசிரியரைக் கொணர்வித்தான்; இராஜசபையில் பலருமறிய

ஆசிரியரை அவர் தம் ஆத்மநாதனாகிய முருகப்பெருமானை வரவழைத்துக் காண்பிக்கும்படிக்கும், அதற்கு ஈடாகத் தான் உபாசனை செய்துவந்த தேவியை அங்ஙனமே வரவழைப்பதாகவும் வாக்குறுதி செய்துகொண்டான். அரசன் கட்டளைப்படி ஏற்பாடுகள் யாவும் முடிந்த பின்னர், முதலில் சம்பந்தாண்டான் தன் தேவியை வரவழைப்பதற்காக எவ்வளவோ பாடுபட்டும் தேவி மறுத்துவிட்டாள். நமது ஆசிரியரோ வெகு எளிதில் "அதல சேடனாராட" என்ற பதிகத்தைப்பாடி முருகப்பெருமானை யாவரும் காண மயில் வாகனாரூடராகக் காட்சி தந்தருளச் செய்தார்.

நிற்க, யாதொரு காரணத்தாலேயோ, அரசனின் இரு கண்களின் ஒளிமறைய, ஆசிரியர் அவன்பால் மிகுந்த கருணை கொண்டவராய்த் தாமே ஒரு கிளி யுருக்கொண்டு விண்ணுலகம் சென்று பாரிஜாத மலர் கொணர்ந்து அரசனின் குருட்டுத் தன்மையைப் போக்கி யருளினார். இவர் புரிந்த பல அதிசயங்களில் இது ஒன்று. (மற்றும் இவர் பரகாயப் பிரவேசம் என்றதோர் அற்ப வித்தையினால் தமது வுடலைத் திருவண்ணாமலைக் கோபுரத்தின் ஓர் பகுதியில் மறைத்து வைத்துச் செத்துக்கிடந்ததோர் கிளியுடலில் புகுந்து பூக்கொணரச் சென்றதாகவும் திரும்பி வருங்கால் இவருடல் சம்பந்தாண்டான் சூழ்ச்சியினால் எரித்து விடப்பட்டதாகவும் கற்பனை பிறந்துள்ளது. ஆண்டவன் இவர்பால் கொண்டுள்ள பெருங் கருணைக்கும் ஆசிரியரது பெருந்தகைமைக்கும் இக்கற்பனை பொருந்துமோ?)

முடிவாகக் கூறின், இவர் தரிசித்துப் பாடாத முருகன் க்ஷேத்திரமே கிடையாது. மற்றும் இவர் பாடியது கந்தரலங்காரம், கந்தரநுபூதி, வகுப்பு, வேல் விருத்தம், மயில் விருத்தம் முதலியன. இவர் தம்மை ஆசிரியராகக் கொள்வார்க்கு இன்றும் என்றும் அநுக்ரகித்து ஆண்டவன் திருவடி பெறுவதில் உதவி புரியக் காத்திருப்பது சரதம். இவரைக் கொண்டாடும் நாள் ஆண்டுதோறும் உத்தராயணத்து ஆறும் பௌர்ணமி யெனக் குறிக்கப்பட்டுள்ளது.

**ஸ்ரீமத் அருணகிரிநாத முனீந்திரர் திருவடி வாழ்க.**

ஓம்

செந்திலாண்டவன் திருவடி துணை

# ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் சரித வரலாறு

அருணகிரிநாதரைப்போலவே முருகனொருவனையே பாடி அநுபூதிபெற்றுச் சமீபத்தில் திருவான்மியூரைச் சார்ந்த மயூர புரததில் சமாதியமர்ந்திருக்கும் பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் திருவிராமேச்சுரதைதச் சேர்ந்த பாம்பனில் பிறந்தவர். இப்பெரியார் இளமையிலேயே முருகன் பக்தி பூண்டொழுகுபவராய்த் தவம், சாந்தம், சீலம் முதலிய நற்குணங்கள் பொருந்தியிருந்தார். சுவாமிகள் முதன்முதலாகத் தேவராய சுவாமிகளருளிச்செய்த கந்தர் சஷ்டிக் கவசத்தை வெகு பக்தி சிரத்தையோடு பாராயணஞ் செய்துவந்தார்; பின்னர் ஆண்டவனைத் தாமும் பாடும்படியான ஆற்றலை அவாவினர்.

இவருக்கு வயது சுமார் பன்னிரண்டு இருக்கும்போது தமது தோட்டத்தைச் சுற்றிப்பார்தது வருங்கையில ஆண்டவனைப்பாடும் திறமைக்காக இவர்மனம் திருவருளை நாடியது. தம்மனத்தே 'கங்கையைச் சடையில் பரித்து' என்னுமோர் மங்கலத்தொடர் புத்திக்கெட்ட அன்று முதல் நாளொன்றுக்கு ஒரு பாடலாக ஆண்டவனைப்பாடாது புசியா நியமங் கொண்டார். இவர் செல்வந்தர் வீட்டுப்பிள்ளையா யிருந்தது பற்றி காலத்தில் தமது சொத்துக்கள், குடும்ப விவகாரங்கள் முதலியவற்றில் பொருப்பு ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. எனினும் 'முத்தர்மனம் மோனத்தே' யென்றபடியே முருகவேளிடத்துப் பற்று அணுவேனும் சுவாமிகள் விடுத்தாரில்லை. இவருக்கு வலுவில் சடக்கரோபதேசம் ஓர் பிராம்மணரால் செய்யுப்பட்டது. உலகவாழ்க்கையில் பற்றில்லா



## பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்

*பாம்பனெனும் பதிமுளைத்த பவளக் குன்றே பழம்பாண்டித்
தமிழ்ப் பொழிலே பண்பா ரிலத்த, தீம்பயிரே அன்புகொழி
திரையே தெய்வத் திறங்கண்ட அறிஞரையே செகத்தி லுற்ற,
கூம்பலற எழுகதிரே குழந்தைவேலன் குகனெறியே நெறியென்ற
குருவே நீதி, ஓம்புகவென் றுரைத்தொழுகி உலகில் வாழ்ந்த உயர்*

தும் இறைவனையே சதா தியானித்தும் இருந்த காரணத்தால், மணத்தில் பிரியமில்லாதிருந்தும் தமக்குபதேசம் செய்தவரும் சுப்ரமண்ய பக்தியில் சிறந்தவருமான *சேது மாதவ அய்யரென்னும் அந்தணரின் பிரியத்திற்குக் கட்டுப்பட்டார். இவருக்கு மூன்று குழந்தைகள் பிறந்தன. இவர் தமது வாழ்க்கையில் பொய்யே சொல்லக் கூடாதென நிர்ணயம் கொண்டவர். ஆனால் தாம் வீட்டை விட்டு அகலவேண்டுமென்ற இச்சையினால் தம்மனைனார்க்கு என்னைப் பழநிப்பதி வரும்படி உத்திரவாயுள்ளது எனவோர் பொய் சொன்னதின் காரணத்தினால், அவருக்கு ஆண்டவன் முன்தோன்றி தாம் உத்தரவிடுகிறவரைக்கும் பழநிப்பதி வரலாகாதென்று கட்டளை பிறப்பித்தார். இது வாய்க்கவேயில்லை. சுவாமிகள் யாவற்றிலும் ஆழ்ந்த அறிவு செலுத்துபவர். அருணகிரியாரைப்போலவே பல முருகன் தலங்கள் பேரிலும் பாடியுள்ளார். இவருக்கும் ஆண்டவனைத் தரிசிக்க வேண்டுமென்று தீர்மானம் வந்துவிட்டது.

தம்மூரைச் சார்ந்த பிரப்பன்வலசை யென்னுமோர் பகுதியில் மயானவெளியிலே ஒரு குழிவெட்டி நாற்புறமும் வேலியிட்டு அதனுள் இறங்கி ஆண்டவனை நோக்கித் தவமிழைப்பதெனவும், தரிசனம்பெறாது மீண்டும் வெளியே வருவதில்லையெனவும் தீர்மானங்கொண்டு அங்ஙனமே செய்து தரிசனமும் உபதேசமும் பெற்றார். இவர் இளமையிலேயே பள்ளிக்கூடப் படிப்பு விடுத்தவராகலின் இவருக்கு ஏற்பட்ட ஆற்றல், ஆண்டவன் அநுக்ரகமே யென உணர்ந்தாராய் 'யாமோதிய கல்வியு மெம்மறிவுந் தாமேபெற வேலவர் தந்தது' என நிர்ணயித்து, தாமியற்றிய ஞானநூல், சாத்திர நூல், இலக்கிய நூல், இலக்கண நூல், பக்தி நூல்கள் முதலிய யாவற்றினும் உட்பொருள் முருகனையே வைத்துள்ளார்; எச்சமயத்தும் கூறியுள்ள கடவுள் தம்முருகனே யென்பார். இவர் மகம்மதியர் கோரியையும், கிறிஸ்துவர் கோயிலையும், தமது இறைவனிருப்பிடமாக நினைப்பார்.

இவர் சென்னைக்குவந்தது சுமார் நாற்பது ஆண்டுகட்கு முன்பேயாம். இவர் சித்துக்களில் யாதும் விருப்பமின்றி,

இளம்பூரணன் தம்மையாட்கொள்ளும் விழைவு ஒன்றே பற்றியிருந்தனர். எனினும் இவர் நேராகச் செய்யாவிடினும், இவரியற்றிய ஷண்முக கவசமும், பஞ்சாமிர்த வண்ணமும் பலவிடத்துப் பலருக்கு ஆச்சரியகரமான நன்மைகள் புரிகின்றன. சுவாமிகளின் தவவலிமையே அவற்றுள் மறைந்து இருக்கின்றதுபோலும்.

சைவசமயாசிரியர் நால்வர் சிவபெருமானைப் பண்முறையாகப் பாடியவிதம் முருகனை யாரும் பாடவில்லை. அது குறைவாகவுள்ளதென்று, சுவாமிகள் கருதி அப்பண்முறையில் நால்வர் பாடிய முறையாகத் திருவலங்கற்றிரட்டு எனமகுடம் சூட்டி பல தலங்களுக்குப் பதிகம் பாடியுள்ளார். இவ்வரிய செய்யுட்களை முருகனிடத்துச் சிறிது அன்புடையாரும் பரிபாலிக்கக் கடமைப்பட்டவர்களே யாவர்.

மேற்கூறிப்போந்த வண்ணம் இவர் தம்மை எந்த முறையிலும் பிரபலப் படுத்திக்கொள்ளக் கூடாதென்னும் கொள்கையராய் இருந்ததில், இவர் ஆண்டவனை நோக்கித் தவம் செய்து கொண்டிருந்ததிலேயே இருந்து விட்டார். இவர் இயற்றிய சாத்திரநூல்கள், இலக்கியநூல்கள், பக்தி நூல்கள் மற்றும் இவர் துறவறவாழ்க்கையில் கண்ட அதிசயங்கள், அநுபவங்கள் இவர் இயற்றிய நூல்களைக் கொண்டாடுபவரே அறிவர்.

இவருக்கு வயது சுமார் எழுபத்திரண்டிருக்கும். உலக ஆடம்பரத்திற்கு மறைந்திருந்தாரெனினும் முருகப் பெருமான் இவரைப் பற்றியும், இவரது தவத்திற்குத் தாம மகிழ்ந்து அநுக்ரகித்ததையும் உலகத்தாரறியும்படி ஒரு திருவிளையாடல் புரிந்தார். தமக்கிருந்த பல சீடர்களுள் இவரே தெய்வம், இவரே செல்வம், இவரே தனக்கு உலகில் யாவுமென்று தமது வருமானத்தையும் உழைப்பையும் தமது பத்தினியாரோடு இவர் திருவடியில் சமர்ப்பித்த சுப்பிரமணிய தாசரென்னும் தீக்ஷாநாமம் பெற்ற பிரபல சோதிடர் சின்னசாமி பிள்ளையவர்கள், சுவாமிகளுக்கு எல்லாச் சௌகரியங்களும் புரியவிருக்க, தாம் தனித்துக் கால நடையாக

சென்னையில் மிகுதியும் நடமாட்டமுள்ள வீதியின் வழியாகச் சென்றனர். அப்போது குதிரை பூட்டிய வண்டி யொன்று சுவாமிகளின்மேல் மோதியது. மோதவே சுவாமிகள் கீழே விழுந்துவிட்டனர். அவர்மேல் வண்டிச் சக்கரமேறி கால் எலும்பு முறிந்து ரத்தம் பெருவாரியாகப் பெருக, சுவாமிகள் மூர்ச்சை யடைந்தார். பின்னர் இவர் ஜெனரல் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோகப்பட்டனர். அங்கே சுவாமிகளைக் கவனித்த மருத்துவ அதிகாரிகள் சுவாமிகள் வயது சென்றவராயிருத்தல் பற்றியும், உப்பு, புளி நீக்கியுண்ட காரணம் பற்றியும், எலும்புகள் கூடுவது அசாத்தியமென்றுரைத்தனர். அப்பால் சுவாமிகளைப் பின்பற்றுவாரில் மூவர் முறையாக நெறியுடன் ஷண்முக கவச பாராயணம் செய்யத் தொடங்கி அதனை நியமமாய்ச் செய்துவந்தனர். அவருள் ஒருவருக்கு பதினோராம் நாள் சுவாமிகளின் முறிந்த கால் இருவேல்களினால் பொருத்தப்பட்டுக் கூடுவது தோன்றிற்று. இவ்வதிசயம் உடனே சுவாமிகளுக்குத் தெரியப்படுத்தப்பட்டது. அதே மகாநாளில் சுவாமிகளும் வேற்கைப்பரமன் தமதிடம் நாடி, தமது முறிந்த காலைப் பொருத்தின காட்சியும் கண்டார். இப்பெரும் அதிசயத்தை உலகத்தாரறிய சுவாமிகள் மார்கழிமாதத்தில் அமரபக்ஷம் (வளர்பிறை) பிரதமை திதியில் கொண்டாடிய விழாவே மயூரவாகன சேவனம்.

இக்கலியுகத்தும் இவ்வளவு சமீபகாலத்தில் நடந்ததோர் பெரிய அதிசயத்தை உலகத்தார் யாவரும் காணவும் அப்பரம கருணாநிதியைப் போற்றவும் போற்றி, இஷ்டார்த்த சித்திகளையடையவும் ஆண்டவன் நமது சுவாமிகள் மூலமாக நமக்கு விளக்கியது மறக்கத்தக்கதன்றாம். இவரது குருபூஜா தினம் வைகாசி மாதம் கிருஷ்ணபக்ஷம் (தேய்பிறை) சஷ்டி திதியாகும்.



ஸ்ரீமத் அருணகிரிநாத முனீந்திரர் அருளிய திருப்புகழ் முதலிய பாடல்களை ஆறு திருமுறைகளாக வகுக்க எண்ணி வெளியிட்ட ஆசிரியர், தம்முடைய பாடல்களையும் ஆறு மண்டலங்களாக வகுத்தருளினார். அன்பர்கள் ஆண்டவனுக்குச் செய்யும் நித்திய பிரார்த்தனையிலே பாராயணஞ் செய்துய்யுமாறு, அம் மண்டலத் திருமுறையில் மண்டலத் திற்கொன்றாக ஆறு பாசுரங்கள் இங்கு சேர்க்கப்பட்டுள்ளன.

**முதன் மண்டலம்**

கங்கையைச் சடையிற் பரித்துமறி மழுவங்
கரத்தினிற் றரித்தருத்ரங்
காட்டுமுழை யதனைச் சித்தமன்றி லாடுகங்
காளர கபின்னமரு
சங்கரி சடாதரி சருவாணி கல்யாணி
தராபரி பவானிதந்த
தந்திமுக னோடுமற றைந்துபெயர் சீர்மையுந்
தனனகத னளதெய்வமே
மங்கையாத மின்பெறுந் நுன்பினை விரும்புமட
மாரகத்தை விட்டதீதர்
வாழ்வுகரும வாழ்வாய வாழ்வினை யளிக்குமுன்
மலரடி தியானிக்கவும
அங்கையினி னெல்லியங் கனியெனத் திருவருளை
யடையவுங் கருணைநல்காய
அருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணத
தாதியே அமராகோவே.

**இரண்டாவது மண்டலம்**

கமழ்க டம்பணி பூணறுங் கண்டனே
சரையில் பிணமண்ணு நிறகும கண்டனே
இமிழ்சி லம்பணி தாங்கிரு காலனே
எவையுந தந்தபின் வாங்கொரு காலனே
தமிழ்நெ டுங்கவி பாடுநா நாதனே
தந்தைக் குங்குரு வானவ நாதனே
அமிழ்த ராசைகொள் பேரின்பக் கட்டியே
அடிய னேனையும் ஆள்நலங் கட்டியே.

### மூன்றவது மண்டலம்

மாபல தேவாகள தேவம னேலைய
வாழவுடை யாாமுதலவா
நீபந ருவணி மாாபவ ஞரத
நீதிப ராகுமரா
பாபவி நாசந டேசகு கேசுர
பாலவி லோசனமா
தாபமு ளேனுனே யேகதி யாயடை
சாாபுளன ஆளுதியால.

### நான்காவது மண்டலம்

கஙகையென சுதனே யெனனக
காாததிகை மதலா பெனனச்
சஙசரி மகனே யெனனச்
சஙகரன குருவே யெனன
மஙகைய ரிருவோ ருநதூ
மணதநிருத தலைவா வெனனப
புஙகவா பரமா வெனனப
பொலிசிவ னடிபோற றவலே.

### ஐந்தாவது மண்டலம்

கஙகை வாாகிடைக கடவுள ே யெனுங
கநத வேளசய கிய ரவிய
புஙகன மாணவ கருளம பாதகம
புரிநத வோாமனு டூகி ரஙகியப
பஙகம வீட்டிமுன கொணட ருளடெனப
பகரன மெயயெனில எளிய னேனமும
மஙக மாயததருள புரிவை யேபருள
வரத சாகரப பெரிய சாமியே. ௫

### ஆறவது மண்டலம்

அமராசிறை விடுதலைசெய விமலா
அடியவாகள நுயரமுறின அதனையடும அமலா
சமநிலையா நினைவிலுறு பொருளே
தகுதகையா தொழுவிமல மலயமுனி யருளே

கமலவய னறிவரிய சிவனே
கரிமுகவ னிளவலென மிளிர்பரம பவனே
குமரகுரு குமரகுரு வெனவே
குயில்பவர்கள் இதயமன வரதம்வளர் நினைவே. ௲

'இவர் தம்மை ஆசிரியராகக் கொள்வார்க்கு இன்றும் என்றும் அநுக்ரகித்து ஆண்டவன் திருவடி பெறுவதில் உதவிபுரியக் காத்திருப்பது சரதம்.



## மயூரவாகன சேவனம்



இப்பெருவிழாவானது பல ஆண்டுகளாகத் திருவான்மியூரைச்சார்ந்த மயூரபுரத்தில் பாம்பன் ஸ்ரீமத் குமரகுரு தாச சுவாமிகள் ஸந்நிதானத்தில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் தரிசிக்க வெகு விமரிசையாக நடைபெற்று வருகின்றது. இது ஒரு தெய்வீகம்பொருந்திய விழாவாகும்.

சித்திரத்தும் பொறிக்க வொண்ணுத் திருவழகைச் (முருகனை) சித்தத்தாலணைவதேபோல் யாதொரு உருவமுமின்றி மத்தியில் வஜ்ஜிராயுதம்வர, இருபுறங்களிலும் குடைகள், வெண்சாமரங்கள், வேலாயுதங்கள், மயில்கள் பொருந்திய தண்டங்கள், சேவற்கொடிகள், ஆலவட்டம், தீவட்டிகள் முதலிய விருதுகள் சூழ, சகல மேளவாத்தியங்கள் முழங்க, வெகு ஆரவாரத்துடனும் பாணவேடிக்கைகளுடனும் பவனி வருதல். விருதுகளைத் தாங்குபவர்கள் சுத்த ஆகாரம் புசிப்பவர்களாகவும், முருகனிடம் மெய்யன்பு செலுத்துகிறவர்களாகவும் ஒரு தெய்வ வழிபாடுடையராகவும் இருப்பர். பவனி வரும்போது திருப்புகழ், தேவாரபாராயண சபையினர் பாடிக்கொண்டே வருவார்கள்.

இப்பெரும் வைபவமான உத்ஸவம் முதன் முதலில் பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகளால் சென்னையின்

வடபாரிசத்தில் ஆரம்பிக்கப்பட்டது. இம் மயூரவாகன சேவனமானது எம்மதத்தாராலும் ஒரு தெய்வீக வழிபாடாகக் கொள்வதற்கு உருவமில்லாமையே மிகப் பொருந்தியதா யுளது. இது ஒரு அற்புதமான விழாவே. காலத்திற்கேற்ப ஒருவாறு நாகரீக முறையை அனுசரித்தும் உளது. இது வருடாந்தரம் மார்கழி மாதம் அமரபக்ஷம் (வளர்பிறை) பிர தமை திதியில் கொண்டாடப்படுவது.

இந்நூதனமான விழாவின் வரலாறு:—சுமார் பதி நான்கு ஆண்டுகளுக்கு முன்னர், பாம்பன் ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள் கால் எலும்பு முறிவுண்டு மருத்துவ சிகிச்சையில் பயன்படாதெனக் கண்டபோது தம்மையாட் கொண்ட, பரம கருணாநிதியாய குகவேளை எந்நேரமும் சிந்தித்துக் கொண்டிருந்தனர். அப்போது, மேற்குறித்த நன்னாளில் அச்செவ்வேட் பரமன் ஒரு குழந்தை வடிவினனாய் இருமயில்கள் ஆடிவர, தம்மைக் கிடத்தியிருந்த அறைக்குள் வந்து முறிந்திருந்த எலும்புகளை ஒன்றன்மேல் ஒன்று பொருத்தி, இரு வேலாயுதங்களால் பிணைத்ததாக கனவு கண்டனர். அதற்கு மறுநாள் காலை, மருத்துவ சோதனையில் இத்தோற்றம் உண்மையெனப் புலப்பட்டது. அது எவர்க் கும் அப்பரம கருணாநிதியின் அதிசயச்செயலை விளக்கியது மல்லாமல் ஒருவித தெய்வீக வுணர்ச்சியைத் தந்தது.

ஆண்டவனின், இம்மகா காருண்யசெய்கையை நாமெல் லாம் உணர்வதின் பொருட்டும் உலகம் அறிவதின் பொருட் டும் இவ்விழா ஏற்பட்டுள்ளது.

சென்னையில் மாத்திரமல்ல, மற்று எவ்வூர்களிலும் ஆண்டவனின் பெருங்கருணையை உணர்வதற்கும், அவனு டைய வழிபாட்டில் அழுத்தமாய் நிற்பதற்கும், அருள்பெறு வதற்கும், இவ்விழா மேற்கூறிய அதிசய சம்பவத்தின் முகாந் தரமாக வெளிப்பட்டது தெய்வத்தன்மையேயாம்.

**மயூரவாகனன் சேவடி வெல்க.**



ஓம
செந்திலாண்டவன் திருவடி துணை

# பதிப்பின் கருத்து

**செவ்வேட் பரமனைச் சிந்திக்கும் திருவருளுடையீர் :**

தெய்வமணம் கமழும் திருப்புகழானது எங்கும் முருகனொளி பரப்பி நின்றது யாவரும் அறிந்ததே. சிவபெருமானையே பாடும் நியமங்கொண்ட தேவார சபைகளும், குகப் பிரமத்தையும் பாட வேண்டுமென்ற அன்புகொண்டு திருப்புகழும் ஓதுகின்றனர். சென்னையில் திருப்புகழையே பாடும் பல சபைகள் நால்வர் தேவாரப் பண் முறையில் பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகளியற்றிய தோத்திரப் பாடல்களை, திருப்புகழோடு முறையாகப் பாட அவாவுகின்றனர். அங்ஙனமே பாடியும் வருகின்றனர்.

செவ்வேட் பரமன் ஒருவனையே புகழ்ந்து பாடிப் பரவி அநுபூதிபெற்ற ஸ்ரீமத் அருணகிரிநாத முனீந்திரரைப் போன்ற நியமங்கொண்டுள்ளாராதல் பற்றி பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் பாடிய பாடல்கள் சிறப்புடைத்தென்க.

அறிவு, ஆற்றல், தகைமை யாதொன்றும் பொருந்தாத கடையேன் எனினும், மேம்பட்டார் கருத்துக்குடன்படுகை இம்**மயூரவாகனன் பாராயணத்திரட்டு** திரட்டியதில், குற்றங்குறைகள் காணின் அவை பொருத்து மன்னிக்குமாறு தாழ்வுடன் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

இப்பதிப்புக்குப் பொருட் சகாயம் செய்தோற்கும், உடனிருந்து உழைத்தோற்கும், ஸ்ரீமத குமரகுருதாச சுவாமிகளியற்றிய பாடல்களை இப்பதிப்பில் இணைக்க அனுமதி ஈந்த மகாதேஜோ மண்டல சபை காரியதரிசி திருவாளர் பு. சம்மந்த முதலியார்க்கும், பிரசுரிப்பதற்கு அனுகூலம் யாவும் செய்த கேஸரி அச்சுக்கூடத் தலைமை பதிப்பாளர் திருவாளர் ஆ. ந. அருணாசல முதலியார்க்கும், மற்றும் அச்சுப்பிழை திருத்தம் முதலியன வெகு சிரத்தையுடன் புரிந்த திருவாளர் கெ. ஜெகந்நாதம் அவர்கட்கும், எனது தாழ்மையான வந்தனங்கள் உரிமையுடையனவாகும்.

இங்ஙனம்,

**க. சிவலிங்கன்.**



ஸ்ரீ

# மயூரவாகனன் பாராயணத்திரட்டு



சிவசுவாமி வணக்கம்

பாராதி யைம்பூத மல்லாத தாயண்ட
    பகிரண்ட மூலமான
  பாவிந்து பரநாத நிலையைக் கடந்தரும்
    பாவன வரூபவிரிவே
நாராக நிற்குமா மாயையை யகன்றதாய்
    நாப்பணடி யீறற்றதாய்
  நானென தெனுநெறிச் செல்வர்கம் பீரமாய்
    நந்தறிரி பில்லாததாய்
நேராய வுவமான வுவமேய நீத்ததாய்
    நின்மல வசங்கநபமாய்
  நித்தபரி பூரண வகண்டதத் துவஞான
    நிட்டையில் விளங்குநிலவாய்த்
தாராள மாய்முதிய முதனூ லிரண்டுமொரு
    சம்மதங் கொண்டுமுடிவிற்
  சாற்றுநற் சச்சிதா னந்தமா யுள்ளசிவ
    சாமியைச் சிந்தைசெய்வாம்.

## ஆசிரியர் ஸ்ரீமத் அருணகிரி முனீந்திரர் வணக்கம்

அருவமொரு நான்காகி யுருவமொரு
நான்காகி யறையி ரண்டும்
மருவியுள வுருவருவ மொன்றாகி
முத்திறமும் வழுத்த வொண்ணுப்
பெருவெளிக்கு மப்பாலா யுள்ளபொரு
ளீதெனவே பெரிதுஞ் சேயோன்
ஒருவனையே புகழ்ந்தவரு ளருணகிரி
சேவடிப்போ துளத்துள் வைப்பாம்.

## பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் வணக்கம்

அமரருக்கோ ரருநிதியா மறுமுகன்சீர்
பரவிமகி ழரசே போற்றி
நமரெனவே தொழுமடியார் நெஞ்சுருக
நயந்தோதும் நாதா போற்றி
சமரபுரிக் கினியதவ வடிவழகே
பாம்பன்பேர் சாமி போற்றி
குமரகுரு தாசனெனுங் குணக்குன்றே
அருள்பழுத்த குருவே போற்றி.

## விநாயகர் வணக்கம்

கைத்தல நிறைகனி யப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுக னடிபேணிக்
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பக மெனவினை கடிதேகும்
மத்தமு மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை

மதகள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா
அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை யிபமாகி
அக்குற மகளுட னச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

உம்பர்தருத் தேனுமணிக் கசிவாகி
ஒண்கடலிற் றேனமுதத் துணர்வூறி
இன்பரசத் தேபருகிப் பலகாலும்
என்றனுயிர்க் காதரவுற் றருள்வாயே
தம்பிதனக் காகவனத் தணைவோனே
தந்தைவலத் தாலருள்கைக் கனியோனே
அன்பர்தமக் கானநிலைப் பொருளோனே
ஐந்துகரத் தானைமுகப் பெருமாளே.

பக்கரைவி சித்ரமணி பொற்கலணை யிட்டநடை
பக்ஷியெனு முக்ரதுர கமுநீபப்
பக்குவம லர்த்தொடையும் அக்குவடு பட்டொழிய
பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்
திக்கதும திக்கவரு குக்குடமும் ரட்சைதரு
சிற்றடியு முற்றியப னிருதோளும்
செய்ப்பதியும் வைத்துயர்தி ருப்புகழ்வி ருப்பமொடு
செப்பெனஎ னக்கருள்கை மறவேனே,

இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப ருப்புடனெய்
• எட்பொரிய வற்றுவரை யிளநீர்வண்
டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள
ரிப்பழமி டிப்பல்வகை தனிமூலம்
மிக்கஅடி சிற்கடலை பட்சணமெ னக்கொளொரு
விக்கினச மர்த்தனெனு மருளாழி
வெற்பகுடி லச்சடில விற்பரம ரப்பரருள்
வித்தகம ருப்புடைய பெருமாளே.

## குமாரபரமேச்வர ஸ்தோத்தியம்

**பண் - கொல்லி**

அரஹர மந்திர வமல நிரந்தர
சரவண சம்ப்ரம சங்கர புத்திர
சுரபதி பூம சுகோதய போதக
பரிபுர சததள பாத நமஸ்தே.

ஆதி யனுதிபு மான வரோதய
ஜோதி நிலாவு ஷடாநந சுபகர
வேதக சமரச விண்டலர் பண்டித
பாதக கண்டன பாத நமஸ்தே.

ஓமர ஹரசிவ வோஞ்சர வணபவ
ரீமர ஹரசிவ நிகழ்பரி புரபவ
ஸ்ரீமர ஹரசிவ திரள்பவ மொழிவளர்
பாமகள் புகழருட் பாத நமஸ்தே.

## ஆறெழுத்துண்மை

### பண் - காந்தாரபஞ்சமம்

அற்புத மாகிய வருமறை மொழிபோல்
வெற்புயர் புவனம்பல் விளங்கிடு மாறு
பற்பல தேவர்கள் படர்ந்தவிண் ணூறினுந்
தற்பர மாவது சரவண பவவே.

பத்தியு ஞானமும் பரவிடு மார்க்க
மெத்தனை யோவகை யிருக்கினு மிகத்தின்
முத்திதந் தனுதின முழுப்பல னல்கச்
சத்திய மாவது சரவண பவவே.

இந்திரன் முனிவர்க ளேத்துபொற் சரணன்
செந்திரு நகரிடஞ் சேர்ந்ததில் வாழ
வந்திருப் புகழ்பா டினவருக் கபயந்
தந்தைதைத் தருவது சரவண பவவே.

### பண் - கௌசிகம்

எண்ணில் பல்வித மாக விருந்திடு
மண்ணொ டைந்து வகைப்படு பூதமும்
பண்ணி வைத்துப் பராபர மாய்நிற்ற
லண்ண லார்பெய ராறக்க ரங்களே.

பூரு வந்தக் கிணைப்புகழ் வாருணஞ்
சீரு யர்ந்த வுதக்கடி சேனுநற்
பூர ணச்செய விற்பொலி வுற்றுள்ள
வார ணன்பெய ராறக்க ரங்களே.

நீண்ட வாழ்வுடை நித்ய வகத்தியன்
பூண்ட மாவறு பூதி புகன்றவன்
காண்டல் கூர்பலர் கண்ணு யிருந்தவை
யாண்ட வன்பெய ராறக்க ரங்களே.

# திருப்புகழ்



முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர எனவோதும்

முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரு
முப்பத்துமு வர்க்கத் தமரரு மடிபேணப்

பத்துத்தலை தத்தக் கணைதொடு
ஒற்றைக்கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியி லிரவாகப்

பத்தற்கிர தத்தைக் கடவிய
பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள்
பக்ஷத்தோடு ரக்ஷித்தருள்வது மொருநாளே

தித்தித்தெய வொத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொட்கந டிக்கக் கழுகொடு கழுதாடத்

திக்குப்பரி அட்டப் பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் த்ரிகடக எனவோதக்

கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென முதுகூகை

கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட வொத்துப் பொரவல பெருமாளே.

## உயிர்க்குறுதி வேட்டல்

மனத்தி ரைந்தெழு மீளையு மேவிட
கறுத்த குஞ்சியு மேநரை யாயிட
மலர்க்க ணண்டிரு ளாகிபு மேநடை தடுமாறி
வருத்த முந்தர தாய்மனை யாள்மக
வெறுத்தி டங்கிளை யோருடன் யாவரும்
வசைக்கு றுஞ்சொலி னுல்மிக வேதின நகையாட
எனைக்க டந்திடு பாசமு மேகொடு
சினத்து வந்தெதிர் சூலமு மேகைபி
லெடுத்தெ றிந்தழல் வாய்விட வேபய முறவேதான்
இழுக்க வந்திடு தூதர்க ளானவர்
பிடிக்கு முன்புன தாள்மல ராகிய
இணைப்ப தந்தர வேமயில் மீதினில் வரவேணும்
கனத்த செந்தமி ழால்நினை யேதின
நினைக்க வுந்தரு வாயுன தாரருள்
கருத்தி ருந்துறை வாயென தாருயிர் துணையாகக்
கடற்ச லந்தனி லேயொளி சூரனை
யுடற்ப குந்திரு கூறென வேயது
கதித்தெ ழுந்தொரு சேவலு மாமயில் விடும்வேலா
அனத்த னுங்கம லாலய மீதுறை
திருக்க லந்திடு மாலடி நேடிய
அரற்க ரும்பொருள் தானுரை கூறிய குமரேசா
அறத்தை யுந்தரு வோர்கன பூசுரர்
நினைதகி னந்தொழு வாரம ராய்புரி
யருட்செ றிந்தவி நாசியுள் மேவிய பெருமாளே.

## திருப்பரங்குன்றம்

உனைத்தி னந்தொழு திலனுன தியல்பினை
உரைத்தி லன்பல மலர்கொடு னடியிணை
உறப்ப ணிந்தில னொருதவ மிலனுன தருள்மாறு

உளத்து ளன்பின ருறைவிட மறிகிலன்
விருப்பொ டுன்சிக ரமும்வலம் வருகிலன்
உவப்பொ டுன்புகழ் துதிசெய விழைகிலன் மலைபோலே

கனைத்தெ ழும்பக டதுபிடர் மிசைவரு
கறுத்த வெஞ்சின மறலித னுழையினர்
கதித்த டர்ந்தெறி கயிறடு கதைகொடு பொருபோதே

கலக்கு றுஞ்செய லொழிவற அழிவுறு
கருத்து நைந்தல முறுபொழு தளவைகொள்
கணத்தி லென்பய மறமயில் முதுகினில் வருவாயே

வினைத்த லந்தனி லலகைகள் குதிகொள
விழுக்கு டைந்துமெ யுகுதசை கழுகுண
விரித்த குஞ்சிய ரெனுமவு ணரையமர் புரிவேலா

மிகுத்த பண்பயில் குயில்மொழி யழகிய
கொடிச்சி குங்கும முலைமுக டுழுநறை
விரைத்த சந்தன ம்ருகமத புயவரை யுடையோனே

தினத்தி னஞ்சதுர் மறைமுனி முறைகொடு
புனற்சொ ரிந்தலர் பொதியவி ணவரொடு
சினத்தை நிந்தனை செயுமுனி வரர்தொழ மகிழ்வோனே

தெனத்தெ னந்தன எனவரி யளிநறை
தெவிட்ட அன்பொடு பருகுயர் பொழில்திகழ்
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே

மன்றலங் கொந்துமிசை தெந்தனந் தெந்தனென
வண்டினங் கண்டுதொடர் குழல்மாதர்
மண்டிடுந் தொண்டையமு துண்டுகொண் டன்புமிக
வம்பிடுங் கும்பகன தனமார்பில்
ஒன்றஅம் பொன்றுவிழி கன்றஅங் கங்குழைய
உந்தியென் கின்றமடு விழுவேனை
உன்சிலம் புங்கனக தண்டையுங் கிண்கிணியும்
ஒண்கடம் பும்புனையும் அடிசேராய்
பன்றியங் கொம்புகமட மம்புயங் கஞ்சுரர்கள்
பண்டையென் பங்கமணி பவர்சேயே
பஞ்சரங் கொஞ்சுகிளி வந்துவந் தைந்துகர
பண்டிதன் தம்பியெனும வயலூரா
சென்றுமுன் குன்றவர்கள் தந்தபெண் கொண்டுவளர்
செண்பகம் பைம்பொன்மலர் செறிசோலை
திங்களுஞ் செங்கதிரு மங்குலுந் தங்குமுயர்
தென்பரங் குன்றிலுறை பெருமாளே.

நகைகந்திரள் கின்றபெ ருங்கிரி
தனில்வந்துத கன்தக னென்றிடு
கதிர்மிஞ்சிய செண்டையெ றிந்திடு கதியோனே
கடமிஞ்சிய நந்த விதம்புணர்
கவளந்தனை யுண்டு வளர்ந்திடு
கரியின்றுணை யென்று பிறந்திடு முருகோனே
பனகந்துயில் கின்ற திறம்புனை
கடல்முன்பு கடைந்த பரம்பரர்
படரும்புய லென்றவ ரன்புகொள் மருகோனே

பலதுன்பமு ழுன்று கலங்கிய
சிறியன்புலை யன்கொலை யன்புரி
பவமின்றுக ழிந்திட வந்தருள் புரிவாயே

அனகன்பெயர் நின்றுரு ளுந்திரி
புரமுந்திரி வென்றிட வின்புடன்
அழலுந்தந குந்திறல் கொண்டவர் புதல்வோனே

அடல்வந்து முழங்கி யிடும்பறை
டுடுடுண்டுடு டுண்டுடு டுண்டென
அதிர்கின்றிட அண்ட நெரிந்திட வருசூரர்

மனமுந்தழல் சென்றிட வன்றவ
ருடலுங்குட லுங்கிழி கொண்டிட
மயில் வென்றனில் வந்தருளுங்கன பெரியோனே

மதியுங்கதி ருந்தட வும்படி
யுயர்கின்ற வனங்கள் பொருந்திய
வளமொன்று பரங்கிரி வந்தருள் பெருமாளே.

பண் - பஞ்சமம்

எந்தையே யிறையே யிணையரு ளிலையே
லிங்கியா னுய்ந்திலே னந்தோ
சிந்தைசேர் வானே திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே
பந்தமே போக்கிப் பதவரு ளாக்கிப்
பகலிர வணவிடா நிலையிற்
சந்ததஞ் சேர்க்கத் தயவுசெய் யாயோ
சரவணச் சுயம்பெரு மாளே.

ஏசுறு வருளா மிதகல மிலேயே
சிங்கியா னுய்ந்திலே னந்தோ
தேசுசே ரெழிலே திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே
பாசமே போக்கிப் பதவரு ளாக்கிப்
பரபரி பூரண நிலேயி
னேசமாய் நிலேக்கச் செயும்வகை புரியாய்
நிகழயிற் சுயம்பெரு மாளே.

இட்டமா மருடா னில்லேயே யாயி
னிங்கியா னுய்ந்திலே னந்தோ
சிட்டர்பா லனனே திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே
கட்டமோ ணவமாங் கயிற்றினே யறுத்தேன்
கவலேயின் றிறங்கடி யாயோ
மட்டிலா வகுப்பை யுணர்த்தவ னிறைவா
மதியயிற் சுயம்பெரு மாளே.

திருச்செந்தூர்

இயலிசையி லுசித வஞ்சிக் கயர்வாகி
இரவுபகல் மனது சிந்தித் துழலாதே
உயர்கருணே புரியு மின்பக் கடல்மூழ்கி
உனேயெனது ளறியு மன்பைத் தருவாயே
மயில்தகர்க லிடைய ரந்தத் தினேகாவல்
வனசகுற மகளே வந்தித் தணேவோனே
கயிலேமலே யனேய செந்திற் பதிவாழ்வே
கரிமுகவ னிளேய கந்தப் பெருமாளே.

முந்துதமிழ் மாலை கோடிக் கோடி
சந்தமொடு நீடு பாடிப் பாடி
முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி யுழலாதே

முந்தைவினை யேவ ராமற் போக
மங்கையர்கள் காதல் தூரத் தேக
முந்தடிமை யேனை யாளாத தானு முனைமீதே

திந்திதிமி தோதி தீதித் தீதி
தந்ததன தான தானத் தான
செஞ்செணகு சேகு தாளத் தோடு நடமாடுஞ்

செஞ்சிறிய கால்வி சாலத் தோகை
துங்கஅநு கூல பார்வைத் தீர
செம்பொன்மயில் மீதி லேயெப் போது வருவாயே

அந்தண்மறை வேள்வி காவற் கார
செந்தமிழ்சொல் பாவின் மாலைக் கார
அண்டருப கார சேவற் கார முடிமேலே

அஞ்சலிசெய் வோர்கள் நேயக் கார
குன்றுருவ வேலும் வேலைக் கார
அந்தம்வெகு வான ரூபக் கார எழிலான

சிந்துரமின் மேவு போகக் கார
விந்தைகுற மாது வேளைக் கார
செஞ்சொலடி யார்கள் வாரக் கார எதிரான

செஞ்சமரை மாயு மாயக் கார
துங்கரண சூர சூறைக் கார
செந்தினகர் வாழு மாண்மைக் கார பெருமாளே.

விறல்மார னைந்து மலர்வாளி சிந்த
மிகவானி லிந்து வெயில்காய

மிதவாடை வந்து தழல்போல வொன்ற
வினைமாதர் தந்தம் வசைகூற

குறவாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீர

குளிர்மாலை யின்க ணணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ

மறிமா னுகந்த இறையோன் மகிழ்ந்து
வழிபாடு தந்த மதியாளா

மலைமாவு சிந்த அலைவேலை யஞ்ச
வடிவே லெறிந்த அதிதீரா

அறிவா லறிந்து னிருதா ளிறைஞ்சு
மடியா ரிடைஞ்சல் களைவோனே

அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
அலைவா யுகந்த பெருமாளே.

கொம்பனை யார்காது மோதிரு கண்களி லாமோத சீதள
குங்கும பாடீர பூஷண நகமேவு

கொங்கையி னீராவி மேல்வளர் செங்கழு நீர்மாலை சூடிய
கொண்டையி லாதார சோலையில் மருளாதே

உம்பர்கள் ஸ்வாமீ நமோநம எம்பெரு மானே நமோநம
ஒண்டொடி மோகா நமோநம எனநாளும்

உன்புக ழேபாடி நானினி அன்புட னாசார பூசைசெய்
துய்ந்திட வீணாள்ப டாதருள் புரிவாயே

பம்பர மேபோல ஆடிய சங்கரி வேதாள நாயகி
பங்கய சீபாத நூபுரி காரசூலி
பங்கமி லாநீலி மோடிப யங்கிரி மாகாளி யோகினி
பண்டுசு ராபான சூரனொ டெதிர்போர்கண்
டெம்புதல் வாவாழி வாழியெ னும்படி வீரான வேல்தர
என்றுமு ளானேம னோகர வயலூரா
இன்சொல்வி சாகாக்ரு பாகர செந்திலில் வாழ்வாகி யேயடி
யென்றனை யீடேற வாழ்வருள் பெருமாளே.

கண்டுமொழி கொம்பு கொங்கை வஞ்சியிடை அம்பு நஞ்சு
கண்கள்குழல் கொண்ட லென்று பலகாலும்
கண்டுளம்வ ருந்தி நொந்து மங்கையர்வ சம்பு ரிந்து
கங்குல்பக லென்று நின்று விதியாலே
பண்டைவினை கொண்டு முன்று வெந்துவிழு கின்றல் கண்டு
பங்கயப தங்கள் தந்து புகழோதும்
பண்புடைய சிந்தை யன்பர் தங்களினு டன்க லந்து
பண்புபெற அஞ்ச லஞ்ச லெனவாராய்
வண்டுபடு கின்ற தொங்கல் கொண்டறநெ ருங்கி யிண்டு
வம்பினைய டைந்து சந்தின் மிகமூழ்கி
வஞ்சியை முனிந்த கொங்கை மென்குறம டந்தை செங்கை
வந்தழகு டன்க லந்த மணிமார்பா
திண்டிறல்பு னைந்த அண்டர் தங்களப யங்கள் கண்டு
செஞ்சமர்பு னைந்து துங்க மயில்மீதே
சென்றசுர ரஞ்ச வென்று குன்றிடை மணம்பு ணர்ந்து
செந்தில்நகர் வந்த மர்ந்த பெருமாளே.

பரிமள களபசு கந்தச் சந்தத் தனமானூர்
படையம படையென அந்திக் குங்கட் கடையூலே
வரியளி நிரைமுரல் கொங்குக் கங்குற் குழலாலே
மறுகிடு மருளனை யின்புற் றன்புற் றருள்வாயே
அரிதிரு மருக கடம்பத் தொங்கற் றிருமார்பா
அலைகுமு குமுவென வெம்பக் கண்டித் தெறிவேலா
திரிபுர தகனரும் வந்திக் குஞ்சற் குருநாதா
ஜெயஜெய ஹரஹர செந்திற் கந்தப் பெருமாளே.

சங்கைதா னென்றுதா னின்றியே நெஞ்சிலே
சஞ்சலா ரம்பமாயன்
சந்தொடே குங்குமா லங்க்ருதா டம்பரா
சம்ப்ரமா நந்தமாயன்
மங்கைமார் கொங்கைசேர் அங்கமோ கங்களால்
வம்பிலே துன்புறாமே
வண்குகா நின்சொரூ பம்ப்ரகா சங்கொடே
வந்துநீ யன்பிலாள்வாய்
கங்கைசூ டும்பிரான் மைந்தனே அந்தனே
கந்தனே விஞ்சையூரா
கம்பியா திந்த்ரலோ கங்கள்கா வென்றவா
கண்டலே சன்சொல்வீரா
செங்கைவேல் வென்றிவேல் கொண்டுசூர் பொன்றவே
சென்றுமோ தும்ப்ரதாபா
செங்கண்மால் பங்கஜா னன்தொழா னந்தவேள்
செந்தில்வாழ் தம்பிரானே.

தண்டையணி வெண்டையங் கிண்கிணிச தங்கையுந்
தண்கழல்சி லம்புடன் கொஞ்சவேநின்

தந்தையினை முன்பரிந் தின்பவுரி கொண்டுநன்
சந்தொடம ணைந்துநின் றன்புபோலக்

கண்டுறக டம்புடன் சந்தமகு டங்களுங்
கஞ்சமலர் செங்கையுஞ் சிந்துவேலும்

கண்களுமு கங்களுஞ் சந்திர நிறங்களுங்
கண்குளிர என்றன்முன் சந்தியாவோ

புண்டரிக ரண்டமுங் கொண்டபகி ரண்டமும்
பொங்கியெழ வெங்களங் கொண்டபோது

பொன்கிரியெ னஞ்சிறந் தெங்கினும் வளர்ந்துமுன்
புண்டரிகர் தந்தையுஞ் சிந்தைகூர

கொண்டநட னம்பதஞ் செந்திலிலு மென்றன்முன்
கொஞ்சிநட னங்கொளுங் கந்தவேளே

கொங்கைகுற மங்கையின் சந்தமண முண்டிடுங்
கும்பமுநி கும்பிடுந் தம்பிரானே.

வரியார் கருங்கண் மடமாதர்
மகவாசை தொந்த மதுவாகி

இருபோது நைந்து மெலியாதே
இருதாளி னன்பு தருவாயே

பரிபால னஞ்செய் தருள்வோனே
பரமேசு ரன்ற னருள்பாலா

அரிகேச வன்றன் மருகோனே
அலைவா யமர்ந்த பெருமாளே.

கோலமத கரியன ம்ருகமத தனகிரி கும்பத் தனமானார்
குமுதஅ முதஇதழ் பருகியு ருகிமயல் கொண்டுற் றிடுநாயேன்
நிலையழி கவலைகள் கெடவுன தருள்விழி நின்றுற் றிடவேதான்
நினதிரு வடிமல ரிணைமன தினிலுற நின்பற் றடைவேனோ
சிலையென வடமலை யுடையவ ரருளிய செஞ்சொற் சிறுபாலா
திரைகட லிடைவரு மசுரனை வதைசெய்த செந்திற் பதிவேலா
விலைநிகர் நுதலிப மயில்குற மகளும்வி ரும்பிப் புணர்வோனே
விருதணி மரகத மயில்வரு குமரவி டங்கப் பெருமாளே.

தந்த பசிதனைய றிந்து முலையமுது
தந்து முதுகுதட வியதாயார்
தம்பி பணிவிடைசெய் தொண்டர் பிரியமுள
தங்கை மருகருயி ரெனவேசார்
மைந்தர் மனைவியர் கடும்பு கடனுதவு
மந்த வரிசைமொழி பகர்கேடா
வந்து தலைநவிர விழ்ந்து தரைபுகம
யங்க வொருமகிட மிசையேறி
அந்த கனுமெனைய டர்ந்து வருகையினி
லஞ்ச லெனவலிய மயில்மேல்நீ
அந்த மறவியொடு கந்த மணிதனம
தன்ப னெனமொழிய வருவாயே
சிந்தை மகிழுமலை மங்கை நகிலிணைகள்
சிந்து பயமயிலு மயில்வீரா
திங்க ளரவுநதி துன்று சடிலரருள்
செந்தி நகரிலுறை பெருமாளே.

18

பண் - பஞ்சமம்

பனியருட் சேஷா பவளச்செவ் வாயா
பச்சைமா லயன்பணி பாதா
புனித குணாளா புகழ்பவர் தோழா
பொன்றிடா வண்டர்தம் பரனே
யேனைமறக் காதிங் கருளிகைப் பவனே
யெழிற்செழுஞ் சீரலை வாயா
தனிநிலைச் சுகனே யுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே.

நண்ணுவா ருறவே யெண்ணுவா ரிறையே
நான்மறை முடிவிறசொல் பொருளே
மண்ணும்வா னகமும் பண்ணுமாள் வினைஞா
மட்டிலா நடனவெம் பரனே
யுண்ணும்வா னமுதே கன்னலா ரிழுதே
யுயர்நிலைச் சீரலை வாயா
தண்ணமார் சரணு வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே.

பவமழிப் பவனே சிவமளிப் பவனே
பரிவுடைத் துவிநவ நயனு
நவமொழிப் புகழ்ப்பாச் சொலினவர்க் கிறையே
நச்சினுர்க் கினியவெம் பரனே
யுவமையிற் படியா வடிவுடைத் திருவே
யுறைநிலைச் சீரலை வாயா
தவவருட் சனகா வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே.

## 19

## திருவாவினன்குடி

மூல மந்திரம் ஓத லிங்கிலை
யீவ திங்கிலை நேய மிங்கிலை
மோன மிங்கிலை ஞான மிங்கிலை மடவார்க

மோக முண்டதி தாக முண்டப
சார முண்டப ராத முண்டிடு
மூக னென்றொரு பேரு முண்டருள் பயிலா

கோல முங்குண வீன துன்பர்கள்
வார்மை யும்பல வாகி வெந்தெழு
கோர கும்பியி லேவி ழுந்திட நினைவா

கூடு கொண்டுழல் வேனை யன்பொடு
ஞான நெஞ்சினர் பாலி ணங்கிடு
கூர்மை தந்தினி யாள வந்தருள் புரிவா

பீலி வெந்துய ராவி வெந்தவ
சோகு வெந்தமண் மூகர் நெஞ்சிடை
பீதி கொண்டிட வாது கொண்டருள் எழுதே

பேணி யங்கெதி ராறு சென்றிட
மாற னும்பிணி தீர வஞ்சகர்
பீறு வெங்கழு வேற வென்றிடு முருகோ

ஆல முண்டவர் சோதி யங்கணர்
பாக மொன்றிய வாலை யந்திரி
ஆதி யந்தமு மான சங்கரி குமரே

ஆர ணம்பயில் ஞான புங்கவ
சேவ லங்கொடி யான பைங்கர
ஆவி னன்குடி வாழ்வு கொண்டருள் பெருமாளே

கரிய பெரிய எருமை கடவு
கடிய கொடிய திரிசூலன்
கறுவி யிறுகு கயிறொ டுயிர்கள்
கழிய முடுகி யெழுகாலம்
திரியு நரியு மெரியு முரிமை
தெரிய விரவி யணுகாதே
செறிவு மறிவு முறவு மனைய
திகழு மடிகள் தரவேணும்
பரிய வரையி னரிவை மருவு
பரம ரருளு முருகோனே
பழன முழவர் கொழுவி லெழுது
பழைய பழநி யமர்வோனே
அரியு மயனும் வெருவ வுருவ
அரிய கிரியை யெறிவோனே
அயிலு மயிலு மறமு நிறமு
மழகு முடைய பெருமாளே.

திமிர வுததி யனைய நரக
செனன மதனில் விடுவாயேல்
செவிடு குருடு வடிவு குறைவு
சிறிது மிடியு மணுகாதே
அமரர் வடிவு மதிக குலமு
மறிவு நிறையும் வரவேநின்
அருள தருளி யெனையு மனதொ
டடிமை கோளவும் வரவேணும்.

சமர முகவெ லசுரர் தமது
தலைக ளுருள மிகவேவி

சலதி யலற நெடிய பதலை
தகர அயிலை விடுவோனே

வெமர வணையி லினிது துயிலும்
விழிகள் நளினன் மருகோனே

மிடறு கரியர் குமர பழநி
விரவு மமரர் பெருமாளே.

அவனிதனி லேபிறந்து மதலையென வேதவழ்ந்து
அழகுபெற வேநடந்து இளைஞோனாய்

அருமழலை யேமிகுந்து குதலைமொழி யேபுகன்று
அதிவிதம தாய்வளர்ந்து பதினாறாய்

சிவகலைக ளாகமங்கள் மிகவுமறை யோதுமன்பர்
திருவடிக ளேநினைந்து துதியாமல்

தெரிவையர்க ளாசைமிஞ்சி வெகுகவலை யாயுழன்று
திரியுமடி யேனையுன்ற னடிசேராய்

மவுனவுப தேசசம்பு மதியறுகு வேணிதும்பை
மணிமுடியின் மீதணிந்த மகதேவர்

மனமகிழ வேயணைந்து வொருபுறம தாகவந்த
மலைமகள்கு மாரதுங்க வடிவேலா

பவனிவர வேயுகந்து மயிலின்மிசை யேதிகழ்ந்து
படியதிர வேநடந்த கழல்வீரா

பரமபத மேசெறிந்த முருகனென வேயுகந்து
பழநிமலை மேலமர்ந்த பெருமாளே

சுருளளக பார கொங்கை மகளிர்வச மாயி சைந்து
சூரதக்ரியை யால்வி ளங்கு மதனூலே

சுருதியென வேசி னைந்து அறிவிலிக ளோடி ணங்கு
தொழிலுடைய யானு மிங்கு னடியார்போல்

அருமறைக ளேநி னைந்து மனுநெறியி லேந டந்து
அறிவையறி வால றிந்து நிறைவாகி

அகிலபுவ னாதி யெங்கும் வெளியுறமெய்ஞ் ஞான இன்ப
அமுதையொழி யாத ருந்த அருள்வாயே

பருதிமகன் வாசல் மந்த்ரி அநுமனொடு சேர்ப ணிந்து
பரிதகழை யாமுன் வந்து பரிவாலே

பரவியபி பீஷ ணன்பொன் மகுடமுடி சூட நின்ற
படைஞரொடி ராவ ணன்ற னுறவோடே

எரிபுகுத மாறி லண்டர் குடிபுகுத மாறு கொண்ட
ரகுபதியி ராம சந்த்ரன் மருகோனே

இளையகுற மாது பங்க பழநிமலை நாத கந்த
இமயவள்த னல்ம கிழ்ந்த பெருமாளே.

ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம் என்றுபூதி

ஆகமணி மாதவர்கள் பாதமலர் சூடுமடி
யார்கள்பத மேதுணைய தென்றுநாளும்

ஏறுமயில் வாகனகு காசரவ ணாஎனது
ஈசஎன மானமுன தென்றுமோதும்

ஏழைகள் வியாகுலமி தேதெனவி னாவிலுனை
யேவர்புகழ் வார்மறையு மென்சொலாதோ

நீறுபடு மாழைபொரு மேனியவ வேலஅணி
நீலமயில் வாகவுமை தந்தவேளே
நீசர்கட மோடெனது தீவினையெ லாமடிய
நீடுதனி வேல்விடும டங்கல்வேலா
சீறிவரு மாறவுண ஞவியுறு மானமுக
தேவர்துணை வாசிகரி அண்டகூடஞ்
சேருமழ கார்பழநி வாழ்குமர னேபிரம
தேவர்வர தாமுருக தம்பிரானே.

அபசார நிந்தைபட் டுழலாதே
அறியாத வஞ்சரைக் குறியாதே
உபதேச மந்திரப் பொருளாலே
உனைநானி னைந்தருட் பெறுவேனே
இபமாமு கன்தனக் கிளையோனே
இமவான்ம டந்தையுத் தமிபாலா
ஜெபமாலை தந்தசற் குருநாதா
திருவாவி னன்குடிப் பெருமாளே.

ஒருபொழுது மிருசரண நேசத் தேவைத் துணரேனே
உனதுபழ நிமலையெனு மூரைச் சேவித் தறியேனே
பெருபுவியி லுயர்வரிய வாழ்வைத் தீரக் குறியேனே
பிறவியற நினைகுவனெ னுசைப் பாடைத் தவிரேனே
துரிதமிடு நிருதர்புர சூறைக் காரப் பெருமாளே
தொழுதுவழி படுமடியர் காவற் காரப் பெருமாளே
விருதுகவி விதரணவி நோதக் காரப் பெருமாளே
விறன்மறவர் சிறுமிதிரு வேளைக் காரப் பெருமாளே

சிவனார் மனங்குளிர உபதேச மந்த்ரமிரு
செவிமீதி லும்பகர்செய் குருநாதா
சிவகாம சுந்தரிதன் வரபால கந்தநின
செயலேவி ரும்பியுளம் நினையாமல்
அவமாயை கொண்டுலகில் விருதாவ லைந்துழலு
மடியேனை அஞ்சலென வரவேணும்
அறிவாக மும்பெருக இடரான துந்தொலைய
அருள்ஞான இன்பமது புரிவாயே
நவநீத முந்திருடி உரலோடெ யொன்றுமரி
ரகுராமர் சிந்தைமகிழ் மருகோனே
நவலோக முங்கைதொழு நிசதேவ லங்கிருத
நலமான விஞ்சைகரு விளைகோவே
தெவயானை யங்குறமின் மணவாள சம்ப்ரமுறு
திறல்வீர மிஞ்சுகதிர் வடிவேலா
திருவாவி னன்குடியில் வருவேள்ச வுந்தரிக
செகமேல்மெய் கண்டவிறல் பெருமாளே.

பண் - நட்டராகம்

சிங்கா நன்குதவுந் திரு வாறெ ழுத்தாளா
கங்கா என்குருவே நினை யேக ருததில்வைத்தேன்
பங்கா வாழ்வுடையா யெனை வாவென் றேயழையாய்
தெங்கார் தென்பழநித திருக் கோவி லுள்ளாயே.

எல்லாருந்தொழுது நல மேற்க வென்றிலற
மில்லா மாதுறவா யில காறெ ழுத்திறைவா
வல்லார் வானவனே யெனை வாவென் றேயழையாய்
செல்வா தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே.

மண்ணோர் சிவனெலா மினு மாண்டெ டூாதவகை
பண்ணு நிற்குமருட் பர மேயண் ணுமலையா •
னண்ணு வென்னுயிரே யெனை வாவென் றேயழையாய்
தெண்ணோர் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே.

திருவேரகம்

சரணகம லால யத்தை அரைநிமிஷ நேர மட்டில்
தவமுறைதி யானம் வைக்க அறியாத

சடகசட மூட மட்டி பவவினையி லேச னித்த
தமியன்மிடி யால்ம யக்க முறுவேனோ

கருணைபுரி யாதி ருப்ப தெனகுறையி வேளை செப்பு
கயிலைமலை நாதர் பெற்ற குமரோனே

கடகபுய மீதி ரத்ந மணியணிபொன் மாலை செச்சை
கமழுமண மார்க டப்ப மணிவோனே

தருணமிதை யாமி குத்த கனமதுறு நீள்ச வுக்ய
சகலசெல்வ யோக மிக்க பெருவாழ்வு

தகைமைசிவ ஞான முத்தி பரகதியு நீகொ டுத்து
தவிபுரிய வேணு நெய்த்த வடிவேலா

அருணதள பாத பத்ம மதுநிதமு மேது திக்க
அறியதமிழ் தான ளித்த மயில்வீரா

அதிசயம நேக முற்ற பழநிமலை மீது தித்த
அழகதிரு வேர கத்தின் முருகோனே.

தெருவினில நடவா மடவா
• திரண்டொ ழுக்கும் வசையாலே

தினகர னெனவே லையிலே
சிவந்து திக்கும் மதியாலே

பொருசிலை வளையா இளையா
மதன்தொ டுக்குங் கணையாலே

புளகித முலையா ளலையா
மனஞ்ச லித்தும் விடலாமோ

ஒருமலை யிருகூ றெழவே
யுரம்பு குதநதும் வடிவேலா

ஒளிவளர் திருவே ரகமே
யுகந்து நிற்கும் முருகோனே

அருமறை தமிழ்நூ லடைவே
தெரிந்து ரைக்கும் புலவோனே

அரியரி பிரமா தியர்கால்
விலங்க விழ்க்கும் பெருமாளே.

குமர குருபர முருக சரவண
குகசண் முககரி பிறகான

குழக சிவசுத சிவய நமவென
குரவ னருள்குரு மணியேயென்

றமுத இமையவர் திமிர்த மிடுகட
லதென அநுதின முனையோதும்

அமலை அடியவர் கொடிய வினைகொடு
மபய மிடுகுர லறியாயோ

திமிர எழுகட லுலக முறிபட
திசைகள் பொடிபட வருசூரர்

சிகர முடியுடல் புவியில் விழவுயிர்
திறைகொ டமர்பொரு மயில்வீரா

நமனை யுயிர்கொளு மழலி னிணைகழல்
நதிகொள் சடையினர் குருநாதா

நளின குருமலை மருவி யமர்தரு
நவிலு மறைபுகழ் பெருமாளே.

கடிமாம லர்க்குளின்ப முளவேரி கக்குநண்பு
தருமா கடப்பமைந்த தொடைமாலை

கனமேரு வொத்திடும்ப னிருமாபு யத்தணிந்த
கருணாக ரப்ரசண்ட கதிர்வேலா

வடிவார்கு றத்திதன்பொ னடிமீது நித்தமுந்தண்
முடியான துற்றுகந்து பணிவோனே

வளவாய்மை சொற்ப்ரபந்த முளகீர னுக்குகந்து
மலர்வாயி லக்கணங்க ளியல்போதி

அடிமோனை சொற்கிணங்க வுலகாமு வப்பவன்று
னருளால ளிக்குகந்த பெரியோனே

அடியேனு ரைத்தபுன்சொ லதுமீதும் நித்தமுந்த
னருளேத ழைத்துகந்து வரவேணும்

செடிநேரு டற்குடம்பை தனின்மேவி யுற்றிடுந்த
படிதான லக்கணிங்க னுறலாமோ

திறமாத வர்க்கனிந்து னிருபாத பத்மமுய்ந்த
திருவேர கத்தமர்ந்த பெருமாளே.

நாவேறு பாமணத்த பாதாரமே நினைத்து
நாலாறு நாலுபற்று வகையான

நாலாரு மாகமத்தி னூலாய ஞானமுத்தி
நாடோறு நானுரைத்த நெறியாக

நீவேறெ னாதிருக்க நான்வேறெ னாதிருக்க
நேராக வாழ்வதற்கு னருள்கூர

நீடார்ச டாதரத்தின் மீதேப ராபரத்தை
நீகாணெனா அனேச்சோ லருள்வாயே

சேவேறு மீசர்சுற்ற மாஞான போதபுத்தி
சீராக வேயுரைத்த குருநாதா

தேரார்கள் நாடுசுட்ட சூரார்கள் மாளவெட்டு
தீராகு காகுறத்தி மணவாளா

காவேரி நேர்வடக்கி லேவாவி பூமணத்த
காவார்சு வாமிவெற்பின் முருகோனே

கார்போலு மேனிபெற்ற மாகாளி வாலைசத்தி
காமாரி வாமிபெற்ற பெருமாளே.

நிறைமதி முகமெனு மொளியாலே
நெறிவிழி கணையெனு நிகராலே

உறவுகொள் மடவர்க ளுறவாமோ
உனதிரு வடியினி யருள்வாயே

மறைபயி லரிதிரு மருகோனே
மருவல ரசுரர்கள் குலகாலா

குறமகள் தனைமண மருள்வோனே
குருமலை மருவிய பெருமாளே.

**பா**தி மதிநதி போது மணிசடை
நாத ரருளிய குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா
காது மொருவிழி காக முறஅருள்
மாய னரிதிரு மருகோனே
கால னெனையணு காம லுனதிரு
காலில் வழிபட அருள்வாயே
ஆதி யயனொடு தேவர் சுரருல
காளும் வகையுறு சிறைமீளா
ஆடு மயிலினி லேறி யமரர்கள்
சூழ வலம்வரு மிளையோனே
சூத மிகவளர் சோலை மருவுசு
வாமி மலைதனி லுறைவோனே
சூர னுடலற வாரிசுவறிட
வேலை விடவல பெருமாளே.

**வா**தமொடு சூலை கண்ட மாலைகுலை நோவு சந்து
மாவலிவி யாதி குன்ம மொடுகாசம்
வாயுவுட னேப ரந்த தாமரைகள் பீன சம்பின்
மாதர்தரு பூஷ ணங்க ளெனவாகும்
பாதகவி யாதி புண்க ளானதுட னேதொ டர்ந்து
பாயலைவி டாது மங்க இவையால்நின்
பாதமல ரான தின்க ணேயமற வேம றந்து
பாவமது பானமு ண்டு வெறிமூடி

ஏதமுறு பாச பந்த மானவலை யோடு ழன்று
ஈனமிகு சாதி யிங்க ணதிலேயான்
ாடழித லான தின்பின் மூடனென வோது முன்புன்
ாரஅருள் கூர வந்து எனையாள்வாய்
சூதமகிழ் பாலை கொன்றை தாதுவளர் சோலை துன்றி
சூழுமதில் தாவி மஞ்சி னளவாகத்
நோரணநன் மாட மெங்கு நீடுகொடி யேத ழைந்த
சுவாமிமலை வாழ வந்த பெருமாளே.

**பண் - கௌசிகம்**

நஞ்சமுண்டகண்டனார் நயந்துதந்தசெல்வனே
பஞ்சபாதகந்தணந்த பண்பினோர்தொழுங்குகா
விஞ்சிசூழ்நடங்கண்மேய வேரகச்சுரேசனே
தஞ்சமென்றடுத்தவென் றனைப்புணர்ந்துகொள்வையே.

வாசவன்றிருக்குசதது நீழலில்வழுத்திய
வீசதுஷ்டனைக்கிணங்கி னோர்புரந்தகித்துளோ
ரேசுழுதளித்தசெல்வ வேரகச்சுரேசனே
தாசனென்றடுத்தவென் றனைப்புணர்ந்துகொள்வையே.

உம்பரும்புகழ்வகுப் புரைத்தவன்றொடுத்தசீர்
பம்புமாலையைத்தினந்தி னம்புனைந்தபாவகி
யெம்பிரானெனக்குணிற்கு மேரகச்சுரேசனே
சம்புவென்றடுத்தவென் றனைப்புணர்ந்துகொள்வையே.

## குன்றுதோறாடல்

நகைத்து வுருக்கி விழித்து மிரட்டி
நடித்து விதத்தி லதிமோகம்

நடத்து சமத்தி முகத்தை மினுக்கி
நலத்தி லணைத்து — மொழியாலும்

திகைத்த வரத்தி லடுத்த பொருட்கை
திரட்டி யெடுத்து — வரவேசெய்

திருட்டு முலைப்பெண் மருட்டு வலைக்குள்
தெவிட்டு கலைக்குள் — விழுவேனோ

பகைத்த அரக்கர் சிரத்தை யறுத்து
படர்ச்சி கறுத்த — மயிலேறி

பணைதத கரத்த குணத்த மணந்த
பதத்த கனத்த — தனமாதை

மிகைத்த புனத்தி லிருந்தி யணைத்து
வெளுத்த பொருப்பி — லுறைநாதா

விரிதத சடைக்கு ளொருத்தி யிருக்க
ம்ருகத்தை யெடுத்தோர் — பெருமாளே.

சீரான கோல கால நவமணி
மா லாபி ஷேக பார வெகுவித
தே வாதி தேவர் சேவை செயுமுக — மலராறும்

சீ ராடு வீர மாது மருவிய
ஈ ராறு தோளு நீளும் வரியளி
சீ ராக மோது நீப பரிமள — இருதாளும்

ஆ ராத காதல் வேடர் மடமகள்
ஜீ மூத மூர்வ லாரி மடமகள்
ஆ தார பூத மாக வலமிட — முறைவாழ்வும்

ஆ ரா.பு நீதி வேலு மயிலுமெய்ஞ்
ஞா ஞபி ராம தாப வடிவமும்
ஆ பாத னேனு நாளு நினைவது பெறவேணும்

ஏ ராரு மாட கூட மதுரையில்
மீ தேறி மாறி யாடு மிறையவர்
ஏ ழேழு பேர்கள் கூற வருபொரு ளதிகாரம்

ஈ டாய வூமர் போல வணிகரி
ஆ டாடி யால வாயில் விதிசெய்த
லீ லாவி சார தீர வரதர குருநாதா

கூ ராழி யால்முன் வீய நினைபவ
னீ டேறு மாறு பானு மறைவுசெய்
கோ பால ராய னேய முளதிரு மருகோனே

கோ டாம லார வார அலையெறி
கா வேரி யாறு பாயும் வயலியில்
கோ னாடு சூழ்வி ராலி மலையுறை பெருமாளே.

கனமுமணிலமுமனல்புனல் நிலமமை
கள்ளப் புலாற்கி ருமிவீடு

கனலெழ மொழிதரு சினமெனமதமிகு
கள்வைத்த தோற்பை சுமவாதே

யுகஇறுதிகளிலு மிறுதியி லொருபொருள்
உள்ளக்க ணேக்கு மறிவூறி

ஒளிதிகழுருவுரு வெனுமறை யிறுதியி
லுள்ளத்தை நோக்க அருள்வாயே

ம்ருகமத பரிமள விகசித நளினநள்
வெள்ளைப் பிராட்டி இறைதாரு

விடதர குடிலச டிலமிசை வெகுமுக
வெள்ளத்தை யேற்ற பதிவாழ்வே

வகுளமு முகுளித வழைகளு மலிபுன
வள்ளிக் குலாத்தி கிரிவாழும்

வனசரர் மரபினில் வருமொரு மரகத
வள்ளிக்கு வாய்த்த பெருமாளே.

கரையற வுருகுதல் தருகயல் விழியினர்
கண்டான செஞ்சொல் மடமாதர்

கலவியில் முழுகிய நெறியினி லறிவுக
லங்காம யங்கும் வினையேனும்

உரையையு மறிவையும் உயிரையு முணர்வையும்
உன்பாத கஞ்ச மலர்மீதே

உரவொடு புனைதர நினைதரு மடியரோ
டோன்றுக என்று பெறவேணோ

வரையிரு துணிபட வளைபடு சுரர்குடி
வந்தேற இந்த்ர புரிவாழ

மதவித கஜரத துரகத பததியின்
வன்சேனை மங்க முதுமீன

திரைமலி சலநிதி முறையிட நிசிசரர்
திண்டாட வென்ற கதிர்வேலா

ஜெகதல மிடிகெட விளைவன வயலணி
செங்கோட மர்ந்த பெருமாளே.

அதிருங் கழல்ப ணிந்து
அபயம் புகுவ தென்று — நிலைகாண

இதயந் தனிலி ருந்து — க்ருபையாகி
இடர்சங் கைகள்க லங்க — அருள்வாயே

எதிரங் கொருவ ரின்றி — நடமாடும்
இறைவன் தனது பங்கி — லுமைபாலா

பதியெங் கிலுமி ருந்து — விளையாடி
பலகுன் றிலும மர்ந்த — பெருமாளே.

சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்கும்
செகுத்தவ ருயிர்க்கும் — சினமாகச்

சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும்
திருப்புகழ் நெருப்பென் — றறிவோம்யாம்

நினைத்தது மளிக்கும் மனத்தையு முருக்கும்
நிசிக்கரு வறுக்கும் — பிறவாமல்

நெருப்பையு மெரிக்கும் பொருப்பையு மிடிக்கும்
நிறைப்புக ழுரைக்குஞ் — செயல்தாராய்

தனத்தன தனத்தந் திமித்திமி திமித்திந்
தகுத்தகு தகுத்தந் — தனபேரி

தடுட்டுடு டுடுட்டுண் டெனத்துடி முழக்கும்
தளத்துட னடக்கும் — கொடுசூரர்

சினத்தையு முடற்சங் கரித்தம லைமுற்றுஞ்
சிரித்தெரி கொளுத்துங் — கதிர்வேலா

தினைக்கிரி குறப்பெண் தனத்தினில் சுகித்தெண்
திருத்தணி யிருக்கும் — பெருமாளே.

ஏனைய டைந்த குட்டம் வினைமி குந்த பித்த
மெரிவ முங்கு வெப்பு வலிபேசா

இகலி நின்ற லைக்கு முயல கன்கு லைப்பொ
டிருமு லென்று ரைக்கு மிவையோடே

மனைகள் பெண்டிர் மக்கள் தமைநி னைந்து சுத்த
மதிம யங்கி விட்டு மடியாதே

மருவி யின்றெ னக்கு மரக தஞ்சி றக்கு
மயிலில் வந்து முத்தி தரவேணும்

நினைவ ணங்கு பத்த ரனைவ ருந்த ழைக்க
நெறியில் நின்ற வெற்றி முனைவேலா

நிலைபெ றுந்தி ருத்த ணியில்வி ளங்கு சித்ர
நெடிய குன்றில் நிற்கு முருகோனே

தினைவி ளங்க லுற்ற புனஇ ளங்கு றத்தி
செயல றிந்த ணைக்கு மணிமார்பா

திசைமு கன்தி கைக்க அசுர ரன்ற டைத்த
சிறைதி றந்து விட்ட பெருமாளே.

தேனுந்து முக்கனிகள் பால்செங் கருப்பிளநிர்
சீரும்ப ழித்தசிவ மருளூறத்

தீதும்பி டித்தவினை யேதும் பொடித்துவிழ
சீவன்சி வச்சொருப மெனதேறி

நானென்ப தற்றுயிரொ டேனென்ப தற்றுவெளி
நாதம்ப ரப்பிரம வொளிமீதே

ஞானஞ்சு ரப்பமகி ழானந்த சித்தியொடே
நாளுங்க ளிக்கபத மருள்வாயே

வானந்த மைழக்கஅடி யேனுஞ்செ ழிக்கஅயன்
மாலும்பி மைழக்கஅலே விடமாளா

வாருங்க ரத்தனெமை யாளுந்த கப்பன்மழு
மானின்க ரத்தனருள் முருகோனே

தானந்த னத்ததன னுவண்டு சுற்றிமது
தானுண்க டப்பமல ரணிமார்பா

தானங்கு றித்துஎமை யாளுந்தி ருக்கயிலே
சாலுங்கு றத்திமகிழ் பெருமானே.

அன்பாக வந்து உன்றாள் பணிந்து
ஐம்பூத மொன்ற நினையாமல்

அன்பால் மிகுந்து நஞ்சாரு கண்க
ளம்பொரு கங்கள் முலைதானும்

கொந்தே மிகுந்து வண்டாடி நின்று
கொண்டாடு கின்ற குழலாரைக்

கொண்டே நினைந்து மன்பேது மண்டி
குன்று மலைந்து அலைவேனோ

மன்றாடி தந்த மைந்தா மிகுந்த
வம்பார் கடம்பை யணிவோனே

வந்தே பணிந்து நின்றார் பவங்கள்
வம்பே தொலைந்த வடிவேலா

சென்றே யிடங்கள் கந்தா எனும்போ
செஞ்சேவல் கொண்டு வரவேணும்

செஞ்சாலி கஞ்ச மொன்றாய் வளர்ந்த
செங்கோ டமர்ந்த பெருமானே.

## 37

நிராமய புராதன பராபர வராம்ருத
நிராகுல சிராதிகப் ப்ரபையாகி
நிராசசி வராஜத வராஜர்கள் பராவிய
நிராயுத புராரியச் சுதன்வேதா
சுராலய தராதல சராசர பிராணிகள்
சொரூபமி வராதியைக் குறியாமே
துரால்புகழ் பராதின கராவுள பராமுக
துரோகரை தராசையுற் றடைவேனோ
இராகவ இராமன்முன் இராவண இராவண
இராவண இராஜனுட் குடன்மாய்வென்
றிராகன்ம லராணிஜ புராணர்கு மாரகலை
யிராஜசொ லவாரணர்க் கிளையோனே
விராகவ சுராதிப பொராதுத விராதடு
விராயண பராயணச் செருவூரா
விராவிய குராவகில் பராரைமு திராவளர்
விராலிம லைராஜதப் பெருமாளே.

சரவண சாதா நமோநம கருணைய தீதா நமோநம
சததள பாதா நமோநம அபிராம
தருணக தீரா நமோநம நிருபமர் வீரா நமோநம
சமதள வூரா நமோநம சகதீச
பரம சொரூபா நமோநம சுரர்பதி பூபா நமோநம
பரிமள நீபா நமோநம உமைகாளி
பகவதி பாலா நமோநம இகபர மூலா நமோநம
பவுருஷ சீலா நமோநம அருள்தாராய்

இரவியு மாகாச பூமியும் விரவிய தூளேற வானவ
ரெவர்களு மீடேற வேழ்கடல் முறையோவென்

றிடர்பட மாமேரு பூதர மிடிபட வேதா ளிசாசர
சிகல்கெட மாவேக நீடயில் விடுவோனே

மரகத ஆகார ஆயனு மிரணிய ஆகார வேதனும்
வசுவெனு மாகார ஈசனு மடிபேண

மயிலுறை வாழ்வே விநாயக மலையுறை வேலா மகீதர
வனசர ராதார மாகிய பெருமாளே.

ஐங்கரனை யொத்தமன மைம்புல மகற்றிவள
ரந்திபக லற்றநினை வருள்வாயே

அம்புவி தனக்குள்வளர் செந்தமிழ் வழுத்தியுனை
அன்பொடு துதிக்கமன மருள்வாயே

தங்கிய தவத்துணர்வு தந்தடிமை முத்திபெற
சந்திர வெளிக்குவழி யருள்வாயே

தண்டிகை கனப்பவுசு எண்டிசை மதிக்கவளர்
சம்ப்ரம விதத்துடனே யருள்வாயே

மங்கையர் சுகத்தைவெகு இங்கித மெனுற்றமன
முன்றனை நினைத்தமைய அருள்வாயே

மண்டலிக ரப்பகலும் வந்தசுப ரகைஷபுரி
வந்தணைய புத்தியினை யருள்வாயே

கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையி லப்பரருள்
கொண்டுஉட லுற்றபொரு ளருள்வாயே

குஞ்சர முகற்கிளைய கந்தனென வெற்றிபெறு
கொங்கண கிரிக்குள்வளர் பெருமாளே.

திருமக ளுலாவு மிருபுய முராரி
திருமருக நாமப் பெருமாள்காண்

ஜெகதலமும் வானு மிகுதிபெறு பாடல்
தெரிதரு குமாரப் பெருமாள்காண்

மருவுமடி யார்கள் மனதில்விளை யாடு
மரகதம யூரப் பெருமாள்காண்

மணிதரளம் வீசி யணியருவி சூழ
மருவுகதிர் காமப் பெருமாள்காண்

அருவரைகள் நீறு படஅசுரர் மாள
அமர்பொருத வீரப் பெருமாள்காண்

அரவுபிறை வாரி விரவுசடை வேணி
அமலர்குரு நாதப் பெருமாள்காண்

இருவினையி லாத தருவினைவி டாத
இமையவர்கு லேசப் பெருமாள்காண்

இலகுசிலை வேடர் கொடியினதி பார
இருதனவி நோதப் பெருமாளே.

மருவுறு வெற்றி மலர்தொடா விற்கை
வலிசெயா நிற்கு மதனாலும்

மதில்கள்தா வுற்ற கலைபடா வட்ட
மதிசுடா நிற்கு மதனாலும்

இருகணால் முத்த முதிரயா மத்தி
னிரவினால் நித்த மெலியாதே

இடருறு மெத்த மயல்கொளா நிற்கு
மிவளைவாழ் விக்க வரவேணும்

கரிகள்சேர் வெற்பி லரியவே டிச்சி
கலவிகூர் சித்ர மணிமார்பா

கனகமா ணிக்க வடிவனே மிக்க
கதிரகா மத்தி லுறைவோனே

முருகனே பத்த ரருகனே முத்தி
முதல்வனே பச்சை மயில்வீரா

முடுகிமே விட்ட கொடியசூர் கெட்டு
முறியவேல் தொட்ட பெருமாளே.

பண் - பஞ்சமம்

கனைகழ லிலகிடு சததள விணையடி
கருதிடு தவமுடையோர்
மனவெளி தனினட மிடுமர ஹரசிவ
வடிவுடை யயிலரசே
பணிமணி யிதழவிழ் தொடைய லணிபெரும
பலகிரி யுறைமுருகா
வினிமைசெய் புரிவுட னேனையு மடிமைகோள
விதுநல தருணமரோ.

களிகிளர் முகமுக னெனுமிரு பனரிய
கடவுளர் கதியினுமேற்
கொளவரு ளினனென வழிபடும் விபுதர்கள்
குலவுற வுளசிவனே
பளக வதரவுமை கரம்வள ரழகிய
பலகிரி யுறைமுருகா
விளமணி புரிவுட னேனையு மடிமைகோள
விதுநல தருணமரோ.

முராணறு புகழ்சொன வருண கிரியைநிஜ
முடிபுடை யறிஞனெனத்
தரணிய ருவணையர் புகழ வருளினவொர்
தகர வெளியிறைவனே
பரவரு நெடுவள மலிய முகில்கள்கவி
பலகிரி யுறைமுருகா
விரிபறு புரிவுட னேனையு மடிமைகோள
விதுநல தருணமரோ.

திருச்சோலைமலை

அகரமு மாகி யதிபனு மாகி யதிகமு மாகி அகமாகி
அயனென வாகி அரியென வாகி அரனென வாகி
அவர்மேலாய்

இகரமு மாகி யெவைகளு மாகி யினிமையுமாகி வருவோனே
இருநில மீதி லெளியனும் வாழ எனதுமு னோடி
வரவேணும்

மகபதி யாகி மருவும்வ லாரி மகிழ்களி கூரும் வடிவோனே
வனமுறை வேட னருளிய பூஜை மகிழ்கதிர் காம
முடையோனே

செககணசேகு தகுதிமிதோதி திமியெனஆடு மயிலோனே
திருமலி வான பழமுதிர் சோலை மலைமிசை மேவு
பெருமாளே

காரணம தாக வந்து புவிமீதே
காலனணு காதி சைந்து கதிகாண
நாரணனும் வேதன் முன்பு தெரியாத
ஞானநட மேபு ரிந்து வருவாயே

ஆரமுத மான தந்தி மணவாளா
ஆறுமுக மாறி ரண்டு விழியோனே
சூரர்கிளை மாள வென்ற கதிர்வேலா
சோலைமலை மேவி நின்ற பெருமாளே.

**வா**தினை யடர்ந்த வேல்விழியர் தங்கள்
மாயம தொழிந்து தெளியேனே
மாமலர்கள் கொண்டு மாலைகள் புனைந்து
மாபத மணிந்து பணியேனே
ஆதியோடு மந்த மாகிய நலங்கள்
ஆறுமுக மென்று தெரியேனே
ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்ட
தாமேயி லென்ப தறியேனே
நாதமொடு விந்து வானவுடல் கொண்டு
நானில மலைந்து திரிவேனே
நாகமணி கின்ற நாதநிலை கண்டு
நாடியதில் நின்று தொழுகேனே
சோதியுணர் கின்ற வாழ்வுசிவ மென்ற
சோகமது தந்து எனையாள்வாய்
சூரர்குலம் வென்று வாகையொடு சென்று
சோலைமலை நின்ற பெருமாளே.

பண் - இந்தளம்

**நி**ன்னையே சிவமா யறுமுனி வருந்துதி நிகழ்த்திப்
பன்னொரு நலமே படைத்துய்ய வருளிய பரனே
மன்னுமா சோலை மலைமரு வுன்பதம் வணங்கற்
கென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநற் றலையே.

சென்னிநா லுடையா னநுதினம் பழிச்சிடு தெய்வ
மென்னவே துலங்கிப் பவளத்தின் றிரளென வியங்கு,
றென்னடைச் சோலை மலைமனு நின்மொழி கேட்க
வென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநற் செவியே.

பன ளைப் புகழ்தான் படித்தவன் றனைத்திருப் பரிவா
லின்னனீத் திருக்க வுரைத்தநின் மயனே யெழிறன்
மின்னுமா சோலை மலைமனு நின்னருள் வேண்டற்
கென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநன் னெஞ்சே.

மற்ற தலங்கள்

காதி மோதி வாதாடு நூல்கற் றிடுவோருங்
காசு தேடி யீயாமல் வாழப் பெறுவோரும்
மாது பாகர் வாழ்வே யெனுநெக் குருகாரும்
மாறி லாத மாகால னூர்புக்

நாத ரூப மாநாத ராகத் துறைவோனே
நாக லோக மீரேழு பாருக் குரியோனே
தீதி லாத வேல்வீர சேவற் கொடியோனே
தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே.

பேர வாவ றுவாய்மை பேசற் கறியாமே
பேதை மாத ராரோடு கூடிப் பிணிமேவா
ஆர வார மாறாத நூல்கற் றடிநாயேன்
ஆவி சாவி யாகாமல் நீசற் றருள்வாயே.

சூர சூர சூராதி சூரர்க் கெளிவாயா
தோகை யாகு மாரா கிராதக் கொடிகேள்வா
தீர தீர தீராதி தீரப் பெரியோனே
தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே.

வாரிமீ தேயெழு திங்களாலே
மாரவே ளேவிய அம்பினாலே
பாரெலா மேசிய பண்பினாலே
பாவியே னாவிம யங்கலாமோ
சூரனீள் மார்புதொ ளைந்தவேலா
சோதியே தோகைய மர்ந்தகோவே
மூரிமால் யானைம ணந்தமார்பா
மூவர்தே வாதிகள் தம்பிரானே.

துள்ளுமத வேள்கைக் கணையாலே
தொல்லைநெடு நீலக் கடலாலே
மெள்ளவரு சோலைக் குயிலாலே
மெய்யுருகு மானைத் தழுவாயே
தெள்ளுதமிழ் பாடத் தெளிவோனே
செய்யகும ரேசத் திறலோனே
வள்ளல்தொழு ஞானக் கழலோனே
வள்ளிமணவாளப் பெருமாளே.

சீதள வாரிஜ பாதா நமோநம
நாரத கீதவி நோதா நமோநம
சேவல மாமயில் ப்ரீதா நமோநம மறைதேடுஞ்

சேகர மானப்ர தாபாந மோநம
ஆகம சாரசொ ரூபாந மோநம
தேவர்கள் சேனைம கீபாந மோநம கதிம்தாயப

பாதக நீவுகு டாராந மோநம
மாவசு ரேசக டோராந மோநம
பாரினி லேஜய வீராந மோநம மலைமாது

பார்வதி யாள்தரு பாலாந மோநம
நாவல ஞானம னோலாந மோநம
பாலகு மாரசு வாமீந மோநம அருள்தாராய்

போதக மாமுக னேரான சோதர
நீறணி வேணியர் நேயாப்ர பாகர
பூமக ளார்மரு கேசாம கோததி யிகல்சூரா

போதக மாமறை ஞானதை யாகர
தேனவிழ் நீபந றுவாரு மார்பக
பூரண மாமதி போலாறு மாமுக முருகேசா

மாதவர் தேவர்க ளோடேமு ராரியு
மாமலர் மீதுறை வேதாவு மேபுகழ்
மாநில மேழினு மேலான நாயக வடிவேலா

வானவ ரூரினும் வீறுகி வீறள
காபுரி வாழ்வினு மேலாக வேதிரு
வாழ்சிறு வாபுரி வாழ்வேசு ராதிபர் பெருமாளே.

விரகற நோக்கியு முருகியும் வாழ்த்தியும்
விழிபுனல் தேக்கிட அன்புமேன்மேல்

மிகவுமி ராப்பகல் பிறிதுப ராக்கற
விழைவுகு ராப்புனை யுங்குமார

முருகஷ டாக்ஷர சரவண காரத்திகை
முலைநுகர் பார்த்திப என்றுபாடி

மொழிகுழ றத்தொழு தழுதழு தாட்பட
முழுதும லாப்பொருள் தந்திடாயோ

பரகதி காட்டிய விரகசி லோச்சய
பரமப ராக்ரம சம்பராரி

படவிழி யாற்பொரு பசுபதி போற்றிய
பகவதி பார்ப்பதி தந்தவாழ்வே

இரைகடல் தீப்பட நிசிசரர் கூப்பிட
எழுகிரி யார்ப்பெழ வென்றவேலா

இமையவர் நாட்டினில் நிறைகுடி யேற்றிய
எழுகரை நாட்டவர் தம்பிரானே.

நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே
நீவந்த வாழ்வைக்கண் டதனாலே

மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே.

வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே
வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா
நாலந்த வேதத்தின் பொருளோனே
நானென்று மார்தட்டும் பெருமாளே.

நாடித் தேடித் தொழுவார்பால்
நானாத் தாகத் திரிவேனோ
மாடக் கூடற் பதிஞான
வாழ்வைச் சேரத் தருவாயே
பாடற் காதற் புரிவோனே
பாலைத் தேனொத் தருள்வோனே
ஆடற் றோகைக் கினியோனே
ஆனைக் காவிற் பெருமாளே.

இரவு பகற் பலகாலும்
இயலிசை முத் தமிழ்கூறித்
திரம தனைத் தெளிவாகத்
திருவருளைத் தருவாயே
பர கருணைப் பெருவாழ்வே
பரசிவ தத் துவஞானா
அரனருள் சற் புதல்வோனே
அருணகிரிப் பெருமாளே.

**தோ**த கப்பெ ரும்ப யோத ரத்தி யங்கு
தோகை யர்க்கு நெஞ்ச மழியாதே

சூலை வெப்ப டர்ந்த வாத பித்த மென்று
சூழ்பி ணிக்க ணங்க ளணுகாதே

பாத கச்ச மன்தன் மேதி யிற்பு குந்து
பாசம் விட்டெ றிந்து பிடியாதே

பாவ லர்க்கி ரங்கி நாவ லாக்கி சைந்த
பாடல் மிக்க செஞ்சொல் தரவேணும்

வேத மிக்க விந்து நாத மெய்க்க டம்ப
வீர பத்ர கந்த முருகோனே

மேரு வைப்பி ளந்து சூர னைக்க டிந்து
வேலை யிற்றெ றிந்த கதிர்வேலா

கோதை பொற்கு றிஞ்சி மாது கச்ச ணிந்த
கோம ளக்கு ரும்பை புணர்வோனே

கோல முற்றி லங்கு சோண வெற்பு யர்ந்த
கோபு ரத்த மர்ந்த பெருமாளே.

**க**யல்விழித் தேனெனைச் செயலழித் தாயெனக்
கணவகெட் டேனெனப் பெறுமாது

கருதுபுத் ராஎனப் புதல்வரப் பாஎனக்
கதறிடப் பாடையிற் றலைமீதே

பயில்குலத் தாரழப் பழையநட் பாரழப்
பறைகள்கொட் டாவரச் சமனாரும்

பரியகைப் பாசம்விட் டேறியுமப் போதேனைப்
பரிகரித் தாவியைத் தரவேணும்
அயிலறச் சேவல்கைக் கினிதரத் தோகையுற்
றருணையிற் கோபுரத் துறைவோனே
அமரரத் தாசிறுக் குமரிமுத் தாசிவத்
தரியசொற் பாவலர்க் கெளியோனே
புயலிளைப் பாறுபொற் சயிலமொய்ச் சாரலிற்
புனமறப் பாவையைப் புணர்வோனே
பொடிபடப் பூதரத் தொடுகடற் சூரனைப்
பொருமுழுச் சேவகப் பெருமாளே.

இருவினையின் மதிமயங்கித் திரியாதே
எழுநரகி லுழலுநெஞ்சுற் றலையாதே
பரமகுரு அருள்நினைந்திட் டுணர்வாலே
பரவுதரி சனையை யென்றேற் கருள்வாயே
தெரிதமிழை யுதவு சங்கப் புலவோனே
சிவனருளு முருக செம்பொற் கழலோனே
கருணைநெறி புரியு மன்பர்க் கெளியோனே
கனகசபை மருவு கந்தப் பெருமாளே.

எழுகடல் மணலை அளவிடி னதிக
மெனதிடர் பிறவி அவதாரம்
இனியுன தபய மெனதுயி ருடலு
மினியுடல் விடுக முடியாது
கழுகொடு நரியு மெரிபுவி மறலி
கமலனு மிகவு மயர்வானார்
கடனுன தபய மடிமையு னடிமை
கடுகியு னடிகள் தருவாயே

விழுதிக ழழகி மரகத வடிவி
விமலி முனருளு முருகோனே
விரிதல மெரிய குலகிரி நெரிய
விசைபெறு மயிலில் வருவோனே

எழுகடல் குமுற அவுணர்க ளுயிரை
யிரைகொளும் அயிலை யுடையோனே
இமையவர் முநிவர் பரவிய புலியூ
ரினில்நட மருவு பெருமாளே.

காவி யுடுத்துந் தாழ்சடை வைத்துங்
காடுகள் புக்குந் தடுமாறிக்
காய்கனி துய்த்துங் காயமொ றுத்துங்
காசினி முற்றுந் திரியாதே

சீவ னொடுக்கம் பூத வொடுக்கம்
தேற வுதிக்கும் பரஞான
தீப விளக்கங் காண எனக்குன்
சீதள பத்மந் தருவாயே

பாவ நிறத்தின் தாருக வர்க்கம்
பாழ்பட வுக்ரந் தருவீரா
பாணிகள் கொட்டும் பேய்கள் பிதற்றும்
பாடலை மெச்சுங் கதிர்வேலா

தூவிகள் நிற்குஞ் சாலி வளைக்குஞ்
சோலை சிறக்கும் புலியூரா
சூரர் மிகக்கொண் டாட நடிக்குந்
தோகை நடத்தும் பெருமாளே.

நஞ்சினைப் போலுமன வஞ்சகக் கோளர்களை
நச்புதற் றீதெனநி னைந்துநாயேன்
நண்புகப் பாதமதி லன்புறத் தேடியுனை
நங்களப் பாசரண மென்றுகூறல்

உன்செவிக் கேறலைகொல் பெண்கள்மேற் பார்வையைகொல்
உன்சோலைத் தாழ்வுசெய்து மிஞ்சுவாரார்
உன்றனக் கேபரமும் என்றனக் கார்துணைவர்
உம்பருக் காவதினின் வந்துதோணுய்

கஞ்சனைத் தாவிமுடி முன்புகுட் டேயமிகு
கண்களிப் பாகவிடு செங்கையோனே
கண்கயற் பாவைகுற மங்கைபொற் ரேடழுவு
கஞ்சுகப் பான்மைபுனை பொன்செய்தோளாய்

அஞ்சவெற் பேழுகடல் மங்கநிட் டூரர்குலம்
அந்தரத தேறவிடு கந்தவேளே
அண்டமுற் பார்புகழு மெந்தைபொற் பூர்புலிசை
அம்பலத் தாடுமவர் தம்பிரானே.

கடிய வேக மாருத விரத ரூத ராபாதர்
கலக மேசெய் பாழ்மூடர் வினைவேடர்
கபட வீன ராகாத இயல்பு நாடி யேநீடு
கனவி கார மேபேசி நெறிபேணுக்

கொடிய னேது மோராது விரக சால மேமூடு
குடிலின் மேவி யேநாளு மடியாதே
குலவு தோகை மீதாறு முகமும் வேலு மீராறு
குவளை வாகும் நேர்காண வருவாயே

படியி னோடு மாமேரு அதிர வீசி யேசேட
பணமு மாட வேரீடு வரைசாடிப்
பரவை யாழி நீர்மோத நிருதர் மாள வாளோடு
பதிய தாக வேலேவு மயில்வீரா

வடிவு லாவி யாகாச மிளிர்ப லாவி னீள்சோலை
வனச வாவி பூவோடை வயலோடே
மணி செய்மாட மாமேடை சிகர மோடு வாகான
மயிலை மேவி வாழ்தேவர் பெருமாளே.

பகரு முத்தமிழ்ப் பொருளு மெய்த்தவப்
பயனு மெப்படிப் பலவாழ்வும்
பழைய முத்தியிற் பதமு நட்புறப்
பரவு கற்பகத் தருவாழ்வும்

புகரில் புத்தியுற் றரசு பெற்றுறப்
பொலியும் அற்புதப் பெருவாழ்வும்
புலன கற்றிடப் பலவி தத்தினைப்
புகழ்ப லத்தினைத் தரவேணும்

தகரி லற்றகைத் தலம்வி டப்பிணைச்
சரவ ணத்தினிற் பயில்வோனே
தனிவ னத்தினிற் புனம றத்தியைத்
தழுவு பொற்புயத் திருமார்பா

சிகர வெற்பினைப் பகிரும் வித்தகத்
திறல யிற்சுடர்க் குமரேசா
செழும லர்ப்பொழிற் குரவ முற்றபொற்
றிருவி டைக்கழிப் பெருமாளே.

எருவாய் கருவாய் தனிலே யுருவா
யிதுவே பயிராய் விளைவாகி

இவர்போ யவரா யவர்போ யிவரா
யிதுவே தொடர்பாய் வெறிபோல

ஒருதா யிருதாய் பலகோ டியதா
யுடனே யவமா யழியாதே

ஒருகால் முருகா பரமா குமரா
உயிர்கா வெனவோ தருள்தாராய்

முருகா வெனவோர் தரமோ தடியார்
முடிமே லிணைதா ளருள்வோனே

முநிவோ ரமரோர் முறையோ வெனவே
முதுசூ ரமேல் விடும்வேலா

திருமால் பிரமா வறியா தவர்சீர்
சிறுவா திருமால் மருகோனே

செழுமா மதில்சே ரழகார் பொழில்சூழ்
திருவீ ழியில்வாழ் பெருமாளே.

பத்தியால் யானுனைப் பலகாலும்
பற்றியே மாதிருப் புகழ்பாடி

முத்தனா மாறெனைப் பெருவாழ்வின்
முத்தியே சேர்வதற் கருள்வாயே

உத்தமா தானசற் குணர்நேயா
ஒப்பிலா மாமணிக் கிரிவாசா

வித்தகா ஞானசத் தினிபாதா
வெற்றிவே லாயுதப் பெருமாளே.

அஞ்சன வேல்விழி மடமாதர்
அங்கவர் மாயையி லலேவேனோ
விஞ்சுறு மாவுன தடிசேர
விம்பம தாயரு ளருளாதோ
நஞ்சமு தாவுணு மரனார்தம்
நன்குமரா வுமை யருள்பாலா
தஞ்செனவா மடி யவர்வாழத்
தஞ்சையில் மேவிய பெருமாளே.

தீராப் பிணிதீர — சீவாத் துமஞான
ஊராட் சியதான — ஓர்வாக் கருள்வாயே
பாரோர்க் கிறைசேயே — பாலாக் கிரிராசே
பேராற் பெரியோனே — பேரூர்ப் பெருமாளே.

நாரியர்க ளாசையைக் கருதாதே
நானுனிரு பாதபத் மமுநாட
ஆரமுத மானசர்க் கரைதேனே
ஆனஅநு பூதியைத் தருவாயே
காரணம தானவுத் தமசீலா
கானகுற மாதினைப் புணர்வோனே
சூரர்கிளை தூளெழப் பொரும்வேலா
தோகைமயில் வாகனப் பெருமாளே.

பொன்னை விரும்பிய பொதுமாதர்
புன்மை விரும்பியெ தடுமாறும்
என்னை விரும்பிநி யொருகால்நின்
எண்ணி விரும்பவு மருள்வாயே

மின்னே விரும்பிய சடையாளா
மெய்யின் விரும்பிய குருநாதா
அன்னே விரும்பிய குறமானை
அண்மி விரும்பிய பெருமாளே.

மனைமக்கள் சுற்ற மெனுமாயா
வலையைக்க டக்க அறியாதே
வினையிற்செ ருக்கி யடிநாயேன்
விழலுக்கி றைத்து விடலாமோ
சுனையைக்க லக்கி விளையாடு
சொருபக்கு றத்தி மணவாளா
தினநற்ச ரித்ர முளதேவர்
சிறைவெட்டி விட்ட பெருமாளே.

காதின் மணி யோலையிட்டு வருமானுர்
காமவல்லி யூடுபுக்கு மதிமாழ்கி
நீதிநெறியே விடுத்து மலையாதே
நீயுனிரு தாளளிக்க வரவேணும்
ஆதி மகமாயிபெற்ற குமரேசா
ஆறுமுகமே படைத்த குருநாதா
தீதிலடியார் மனத்தில் உறைவோனே
தேவர்குடி வாழவைத்த பெருமாளே.

## திருவருள்பிரார்த்தனை

### பண் - நட்டபாடை

பொய்யாமுகத் தின்வாழ்விற் புகாதுன்னடி யாருய்
மெய்யாமுகத் தினுக்கேவர மிகுமாவலிங் குள்ளே
ஐயாரடிக் கமலந்தொழ லானேனரு ளின்றி
யுய்யேனினி யுய்யேன்மயி லூரும்பெரு மானே.

தண்மாத்தட வாராணசி தனிற்போமுயிர் களுக்கண்
ணொண்மாமறை மூலஞ்சொலி யுருவார்கதி நல்குங்
கண்மூன்றுடை யாற்கன்புள கறையில்குரு வான
கண்மாமணி யேயுன்னடி காணாமலுய் யேனே.

தன்னையறி வேனேற்கொளுன் றன்னையறி வேனின்
றென்னையறி யாதேயினிச் செயுமாறென கொடியாய
மன்னேமயி லேறுங்குரு மணியேகிரி புகழ்ந்த
வன்னேயெனை யாளுந்திரு வருளேதிரு வருளே.

## நின்றநிலை விண்ணப்பம்

**பண் - பழம்பஞ்சுரம்**

நித்த முன்றனைப் பாவித் தோர்ந்தது
நிச்ச யம்மென் றுணர்த்தவே
சத்தி யத்தொடு மென்மு னேவந்தென்
ருச வாவெனு நாளெதாய்
நத்து மோவன்று தானன் றேவென்ற
னாட்டங் கூடுத லாகுநாண்
முத்த னேமுரு கைய னேபர
மோன னேயறி வாயரோ.

மண்ணி னாசை மடங்கி நானந்த
விண்ணி னாசையை வெளவுநா
ளெண்ணு கின்ற படிக்கு நீவந்
திணக்கி யன்பொ டுரைக்குநா
ளொண்ணு மேலருள் பண்ணு மேயென்
னுயி ரிரி னுக்குபி ராய்மினி
ரண்ண லார்விழி பன்னி ரண்டுடை
யண்ண லேயறி வாயரோ.

ஊரும் பேருரு வுஞ்செல் லாகவென்
றாரும் பேருரு வுந்தரித்
தாருஞ் சொல்லற் கருஞ்சொல் லொன்றை
யருள்செய் தங்கிச மாக்கொளுஞ்
சீரு டைக்குரு மூர்த்தி யேயிவன்
செய்யும் விண்ணப்ப முய்யவே
சாரு டைப்புகழ் பாடி ஞேன்கண்ட
சண்மு காவறி வாயரோ.

அருண்மாட்சிமை

பண் - நட்டராகம்

ஆரொண் கங்கைபுனே யர ருைடை வான்பொருளே
யூரும் பொன்மயிலில் வந் தொளிர்சிவ ரத்தினமே
தேருந் தொன்மறையின் பொருள் சேராண் முத்தேதின்
காருண் யம்மிலேயேற் கணப் போதினி யுய்யேனே.

விண்ணு டுய்பவர்கள் விரை வெண்மல ராற்புசிதம்
பண்ணு நின்றவுன்றன் றிருப் பாதம் வழிபடுவோர்
நண்ணுர் சன்மவுல ரயி ஞயக னேயுனருட்
கண்ணேக் கில்லேயெனிற் கணப் போதினி யுய்யேனே.

வாளா ரகூதியெழில் வளர் வள்ளி மனேகரமே
நீளா திக்கமெனுஞ் சிவ நேசகிர் பாகரமே
கோளி னங்குறுகாப் புகழ் கூறின வன்பரனே
யாளா தேபோனு லனுப் போதினி யுய்யேனே.

அடைக்கலம்

பண் - இந்தளம்

அஞ்சு மாகி யாறு மாகி யாதி யந்த நாப்ப ணின்றி
விஞ்சி யேகி றைந்த தாகி வேலு டைக்கை யானென் றுகித்

துஞ்ச ரேற்ற நீத்த நீத சுப்பிர மணிய மான தேவே[லம்மே.
தஞ்ச மேவுன் னடிப்பண் போதுந் தாச னின் னடைக்க

பெண்ணு மாகி யாணு மாகிப் பேத மோட பேத மும்மாய்
மண்ணு மாகி விண்ணு மாகி மற்று மேற்ற செயல்க ளாகி
யெண்ணெ ணுச்சை தன்ய மும்மா மீச னேசு ரேச னேநற்
றண்ண மேவுன் னடிப்பண் போதுந் தாச னின் னடைக்க
[லம்மே.

சிட்டி காவ லொடுந சிப்புந் திரோப வஞ்செவ் வருட்ட யாவும்
மட்டி லாம லேந டாத்த வல்ல மையுள் ளோய்வி னைதச்
செட்டியாக வடிவு கொண்டோய சிதநிசொனவற்கருள்புரிந்தோய்
தட்டி லாவுன் னடிப்பண் போதுந் தாச னின் னடைக்க லம்மே.

## துக்கரகிதபிரார்த்தனே

### பண் - பழம்பஞ்சுரம்

மூன்னா னயனு முன்னா லரியா மொழிசேர் மறைநாவா
வின்னு வனுகா விறைவா குரவா விறையோர் பணிபாதா
மன்னார் மயிலில் வருமா பாலா மடியா வாழ்வாளா
வன்னே யயனே யெனுமென் கவலே யறநீ யருள்வாயே.

ஒழியா விசதப பொடிபாய் பொடியா வுரையார் பொற்கழலாப்
பழிசேர் சிதடத் தனுவோர் பகைஞா பகல்சேர் வேற்கையா
பொழிலார் பழநிப் பதியாய் நிதியாய் புநிதா மாப்பொறையா
வழியா மொழியா வென்றன் கவலே யறநீ யருள்வாயே.

விண்ணு டுறைநா ரதனு சிரியா வியன்வா ருணியீசா
மண்ணார் முசுமன் னலேயாள் சிவனே மதியீ புண்ணியனே
பண்ணார் புகழ்பா டினவன் பதியே பரனார் குருநாதா
வண்ணு வடிபே ணியவென் கவலே யறநீ யருள்வாயே.

## திருக்குன்றக்குடி

### பண் - காந்தாரம்

பூமுடி விண்ணவர் வாழ்வும் பூதல மன்னவர் வாழ்வுந்
தூமுடி நாகர்கள் வாழ்வுஞ் சுந்தர நின்னடி யார்க
டாமுறு வாழ்வினுக் கேயோர் சற்றுநே ராகுமோ நாகர்
கோமுனி வோர்தொழுங் கோவே குனறக் குடியுறை தேவே..

ஆறுசு மயங்க ளெங்கு மாநந்த மாய்விளை யாடி
யீ றுமு தனடு வேது மிலாதவி ருன்னடி நேடி
நீறணி தொண்டர்கள் வாழ்வே நித்திய மென்றொரு வாய்மை
கூறும மறைபுகழ் கோவே குன்றக் குடியுறை தேவே.

நற்றமிழ் பாடுநக் கீரன் ஞானவே ளியநா பூதி
சொற்றவ னேத்தரு ளோனே தோகைம யிற்பரி யானே
யிற்றையெ னக்கருள் வோனே யெங்கள் சிவபெரு மானே
குற்றமி லாமறைக் கோவே குன்றக் குடியுறை தேவே.

## திருத்தோத்திரம்

### பண் - பஞ்சமம்

திருமலி முதுமறை நுவல்பொருளுந்
தினசைவ முறைமுறை யிடுபொருளும்
பொருண்மலி மிருதிகள் புகல்பொருளும்
புகரில்பு ராதன சரிதமறை
யருமுறை பலநவில் கிறபொருளு
மறிஞர்க ளறைதரு மொருபொருளுந்
தெருண்மலி குகனென மொழிபொருளுஞ்
சிவசிவ சிவசிவ சிவசிவவே.

இறுதியி லியல்பரு ளதுபிரியா
வினையிலி யாமொரு பதியெனவுங்
குறுகிய வறிவுடை யுயிர்களிடங்
குறியற மருவிய பொருளெனவு
மறிவறு பொருளினை யுயிருருவா
யமைவுற வணைகிற விறையெனவுஞ்
சிறுகில்கு கனெனவு நிலவுவது
சிவசிவ சிவசிவ சிவசிவவே.

கயல்விழி மறிமகள் கணவனெனக்
கருதியிவ் வகிலமு ளேதமிழிற்
பயில்புகழ் சோடச நூறுதசம்
பன்னிய வறிஞனை யாளடிமை
தயவொடு கொண்டது போலெனையுந்
தடையறக் கொண்டிடு குருமுதன்மைச்
செயலுடை முருகென நிலவுவது
சிவசிவ சிவசிவ சிவசிவவே.

## திருவுருமலை

**பண் - பஞ்சமம்**

**பூ**மக ளகமே குளிர்ந்தெழில் குலவும்
பொருப்புயர் புவனங்க டாமார்
மாமிகு பெரியண் டங்களெல் லாமுன்
மயிர்நுனி தோறுநின் றிலக
வோமய வடிவா யுளமறை முதல்வா
வுனதடித் தொழும்பினி லெனையாள்
சாமிநீ யருள்செய் திருவுரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே.

நாகர்க ளலக்கண் டீர்த்துநல் லுறுவர்
நலம்பெற வருளிய விறைவா
சூகர மதனை நசித்துல கனைத்துஞ்
சுகப்பட வருளிய வீரா
தாகமாய் வலிப்போர்க் கினியதண் மழையைத்
தருமருட் கதம்பமே யமுத
சாகர மேயா டிருவுரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே.

வாலுளக் குறமா னினிமதர்ச் சுரமா
மடவரன் மாமணத் தலைவா
வேலுடைச் சயத்தோய் விரைத்தொடைப் புயத்தோய்
வியன்புகழ் கொடித்தவன் பரனே
தோலுயர் வறுசொல் லுடையெளி யேனின்
றுயர்வலி கடிந்துநற் சுகமே
சாலுமா றருளாய் திருவுரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே.

## திருநெல்வேலிக்கோவில்

### பண் - நட்டராகம்

சீருடை யாரியனே யெனைச் சேர வணைப்பவனே
யேருடை வானவர்க ணித மேததும் பராபரனே
யாருடை வேலவனே நெல்லை யப்பர் விமானமுறை
நாருடை யோமயனே யென்ற ளுட்டத்தைப் பூர்த்திசெய்யே.

கச்சணி மாமுலையாள் குறக் காரிகை காவலனே
சொச்சமெய் யோகருளந் தனிற் சொந்தப்பட் டுள்ளவனே
யச்சமில் சிற்பரனே நெல்லை யப்பர் விமானமுறை
யெச்சமி லெம்பரனேயென தெண்ணத்தைப்பூர்த்திசெய்யே.

சங்கையி லுன்புகழைத் தினஞ் சாற்றிய வெங்கைபிரா
னிங்கெனை யுய்வித்தவ ருனை யன்றி யெவருளரா
லங்கியின் மேனியனே நெல்லை யப்பர் விமானமுறை
பங்கமி லாயெனது வழி பாட்டினைப் பூர்த்திசெய்யே.

## ஐக்கியமன்றாட்டு

**பண் - பழம்பஞ்சுரம்**

திங்கள் வேணியன் மைந்த னேசிவ
னேயெ னாருயிர் நாதனே
மங்கு மஃறிணை யாவி யாக
வகுத்தி டாதிந்த மாநுட
வங்க மாக வகுத்த நின்னருட்
பாட்டை நான்மற வேனினுஞ்
சங்கை காதரு ளுந்தி மூழ்கியுன்
றன்னை மேவ விழைத்தியே.

மின்னும் வேலமர் கைய வெம்பெரு
வேந்த னேவள்ளி காந்தனே
நன்னர் சேர்மனு யாக்கை யேற்று
நலம்ப டாவுறுப் பினர்போ
லென்னை நீவனை யாம னன்குசெய்
திட்ட வீர மறக்கிலேன்
றன்னு ளாரரு ளுந்தி மூழ்கியுன்
றன்னை மேவ விழைத்தியே.

மண்ணும் வானமு மெச்ச வேபுகழ்
பாடி னோனக மாமணீ
கண்ணி லாமட வோர்சி னேகித
நீக்கி யுன்னொரு காமரே

யெண்ணி நாளு மிருக்க வாக்கிய
விட்ட நான்மற வேனினுந்
தண்ண ருவரு ளுந்தி மூழ்கியுன்
றன்னை மேவ விழைத்திடயே.

### உள்வைப்பு

**பண் - பழம்பஞ்சுரம்**

உலகம் யாவும் படைத்தவனை யுகந்தெவ் வுலகும் புரப்பவனை
யிலகு முயிருட் கலந்தவனை யெங்கு நீப்பின் றிருப்பவனை
நிலவு மயிலைப் பிடித்தவனை நிகரில் சிகண்டி யூர்பவனை
யுலவா வெங்க ளுத்தமனை யுள்ளத் துள்ளே வைத்தேனே.

காதற் கிமையந்த காதலனைக் கருணைக் கடலைக் கண்மணியைச்
சீதப பாலைத தேஙகனியைத தெவிட்டா வின்பத் தீஞ்சுவையை
யாதிப் பெருமா னுயவனை யாறு முகத்துச் செம்மணியை
யோதற் கரிய வெம்மானை யுள்ளத் துள்ளே வைத்தேனே.

வெள்ளிக் கயிலை மலைவாழ்வை வியனுர் மோன ரகக்கழையைக்
கள்ளிற் பெரிய திருப்புகழைக் கழறி யிரியா வாக்கமுற்ற
வள்ளற் குள்ளங் குளிர்வித்த மழையா முகிலை வான்மணியை
யுள்ளற் கரிய வெம்மானை யுள்ளத் துள்ளே வைத்தேனே.

### நமன்றமர்நணுகாநெறி

**பண் - நட்டபாடை**

ஆதித்தரெ னச்சொல்சுரர் களினீள்பகை யறுத்த
சோதிச்சுடர் வடிவேலவர் சுகுர்தத்திரு நாம
மோதிப்புவி மீதேநித முவந்தாரரு ளடிச்
சாதித்திடு வோர்பானமன் றமர்தாநணு காரே.

என்பார்தசை செந்நீர்நரம் பெனவேய்ந்தபொய் யாக்கை
துன்பாலழி முனமேசிவ சுதனை குகேச
னன்பாவதை யன்போடெண்ணி யன்பிற்படி யுமவன்
றன்காணினை வோர்பானமன் றமர்தாநணு காரே.

தேர்ந்தோர்துதி செய்யுந்திருப் புகழ்சொன்னவ னெஞ்ச
மோர்ந்தேயருள் புரிந்தோனெனு முமையாள்சுத னடிக்கண்
வார்ந்தோடுநன் மதுநச்சிடு வரிபோலவ னன்பிற்
சார்ந்தேயிருப் போர்பானமன் றமர்தாநணு காரே.

## வழிபாட்டின்மாட்சி

**பண் - இந்தளம்**

**க**ரியுரி போர்த்தவர் காதல னாய
விரிகதிர் வேலுடை யாயுனை வேண்டித்
திரிபவ ருலகினிற் றீதடை வாரோ
பரிவுடை யின்னருட் பாடடை யாதே.

வானத்துய் வோரிறை யோனெனு மாண்பு
ஞானப்பொன் வேலுடை யாயுனை நாடி
யேனிற்கு மேசில ரிழிவடை வாரோ
தேனிற்கு மேலுயர் சேணடை யாதே.

திருப்புகழ் நாவலன் றிருப்புக ழணிக்கு
விருப்புடை வேலுடை யாயுனை மறவாக்
கருத்துளர் பிறிதொரு கருப்புகு வாரோ
வுருக்கிய வுடம்புட னுனையடை யாதே.

## தாசப்பிரகாசம்

**பண்-கொல்லிக்கௌவாணம்**

**பொ**ன்மருவு பொடிமேனிப் புலவற்குத் தாசன்
புகரற்ற நறுநீபம் புனைவோற்குத் தாசன்
தென்மலய மாமுனிவன் குரலற்குத் தாசன்
செழுந்தூவி மயிலூருஞ் சிவனுக்குத் தாசன்

கன்மவினை போக்கியருள் கந்தற்குத் தாசன்
காங்கேயத் திருநாமக் கடவுட்குத் தாச
னென்மனதி லுள்ளவயி லிறைவற்குத் தாச
னெங்குநிறை விண்குமார குருதாச னுனே.

சங்குமிலே சங்கரர்சு வாமிக்குத் தாசன்
றண்ணளியி னவர்தந்த குமரற்குத் தாசன்
பொஙகரவ ணிந்தவுமை மைந்தற்குத் தாசன்
பொருவற்ற வேணுமைப் புனிதற்குத் தாசன்
றிங்கண்முக வள்ளிமண வாளற்குத் தாசன்
றிவ்யசுர குஞ்சரியின் றலைவற்குத் தாச
னிங்கிதகு ணப்பரம முருகற்குத் தாச
னெங்குநிறை விண்குமார குருதாச னுனே.

கல்லாலி னிறைபோல வோங்குபர வோதிக்
கண்ணுறு பெயர்க்கறிவு தந்தோற்குத் தாசன்
வில்லாரும் பழநிமிசை வெண்கச்சை சார்த்தி
மிளிர்கின்ற வொருதண்ட பாணிக்குத் தாச
னல்லார்கள் போல்வைக்க நினைத்தென்னை நேடி
நன்னவிர முண்டிதமாய் வந்தோற்குத் தாச
னெல்லாரு மேத்தருண கிரிகோற்குத் தாச
னெங்குநிறை விண்குமார குருதாச னுனே.

மிசைவேல் வயவை

பண் - யாழ்முரி

101 மலைச் செல்வியையோர் புறம் வைத்துயர் வெண்டிகழ்
வரை யுறை யிறை யவ ரருளி னுய்புநறுங்
கோமிளிர் வானவர்கள் பழிச் சிப்பணிந் தாம்வரங்
கொள வுள கட வுள ரெனவி ளங்கியொண்மை

நாமகள் கிரமுறுமே ழிசைப் பூதக ணம்பல
சரி கம பத நியென் றுரிய ணைம்பாட
வேமவு ளங்கனிந்து நடஞ் செய்குகன் மெய்யடி
தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே.

மைச்சல ராசிவளை நில மேவுப சுக்களை
மறு புதை புக வயர் பிரம ஞர்சிரசிற்
கைச்சுமங் கொண்டுகுட்டித் திருக் காலுதை யுந்தருங்
கரு ணையை யுள விறை பிறக யன்புரியும்
துச்சமி லாததவந் தனைக் கண்டவன் செய்யொரு
தொழி லினை நனி யுத வியபி ரானெனவே
மெச்சிநி தங்குறைவி லருள் வேட்டவன் மெய்யடி
தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே.

தேங்கிள ரண்டநிரை களைத் தன்பெருங் கர்ப்பமுட்
சிறு சிறு துக ளென நிறுவி யங்ஙனமே
தாங்கியு மப்பொருளி லுயிர் போலவி ராவியே
தகு குணங் குணி யெனச் சமைய வேவிரித்து
மோங்கிடு மக்குணமொன் றிலி யென்னவு முள்ளதே
வொரு குக னென வரு ணகிரி யுன்னிமகா
வீங்கல ணைந்தபடி யவன் றுய்யகன் மெய்யடி
தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே.

## பரமப்பிரகாசம்

### பண்-பழம்பஞ்சுரம். பண்-கொல்லி

கங்கை சூடிறை புதல்வ ரோகன கந்த மாதன வீசரோ
வங்க மாறுடை யைய ரோதுடிக் கைய ரோவெறி சூலமே
செங்கை மீதணி தேவ ரோசிவை செல்வ ரோசுர குஞ்சரி
பங்க ரோவர துங்க ரோநமை யடிமை கொண்டவொர் பரமரே.

வேரி கொண்ட கடம்ப ரோகுற மின்னி டஞ்செ லிடம்பரோ
வாரி யுண்டவர் குரவ ரோபவ னிறைவ ரோவறு மங்கைமார்
பீரை யுண்ட புநீத ரோவடி பேணு மன்பர்க ளன்பரோ
பார ருந்தவ ரரைய ரோநமை யடிமை கொண்டவொர் பரமரே.

ஏசி லாத சுரேச ரோசக தீச ரோபர மேசரோ
காசி லாவரு ளாள ரோவுழல் கான டாத்தொரு தேரரோ
வாசி லாவரு ளூச லப்பெய ரானி னைந்த குகேசரோ
பாச மாமல நாச ரோநமை யடிமை கொண்டவொர் பரமரே.

## வாதனை நீக்கமன்றாட்டு

### பண் - தக்கராகம்

பூவா ரேர்முடி மலரய னரிமால்
புதுமா மலர்கொண் டருச்சித்தே
தேவா காவென விறைஞ்சிரு சரணா
சிவனே செவ்வேட் பெயர்நாதா
தாவா நோவெனுங் கலிதனி லமிழ்ந்தோன்
றலைவா காவென் றொலித்தாலே
வாவா வென்றெடுத் தணைத்தருள் புரியா
மனனே நீவந் தருளாயே.

பேழ்வாய்ப் பூதர்கள் பலபல பறைகள்
பிசகா மேகொட் டிடநடமே
காழ்வீ ரார்கழ லொலிதர வுழல்வோர்
கமழ்தோ ளேறு மலர்ப்பாதா
தாழ்வா நோவெனுங் கலிதனி லமிழ்ந்தோன்
றலைவா காவென் றொலித்தாலே
வாழ்வோய் வாவென வெடுத்தருள் புரியா
மனனே நீவந் தருளாயே.

குமரா நீடொளி யருணையின் பெயரோன்
• குருவே கோவே கூர்த்தவயி
லமலா பாதக மடுசிவ மணியே
யடியேன் பாவிற் குரியோனே
தமமா னோவெனுங் கலிதனி லமிழ்ந்தோன்
றலைவா காவென் றொலித்தாலே
யெமனீ வாவென வெடுத்தருள் புரியா
தவனோ நீவந் தருளாயே.

## துயரறக்குமார்க்கவிளக்கம்

### பண் - நட்டராகம்

மணிம தாணி மார்பினர் மாசில் பரசுப் படையினர்
திணிம யூர வாகனர் சீத மேய நீபவீ
யணிவி சாகர் சேவடி யடைவ தேமெய் வீடெனுப்
பணிவி வேகர் தூவடி பரவச் சூர்கள் பாறுமே.

நாத கீதப் பிரியர்மெய்ஞ் ஞான யோகத் திருவினர்
பூத நாதர் பொருவிலாப் பூதி திமிரு மேனியர்
வேத நீதர் வேய்ங்குழ லூது வாயர் வேலவர்
பாத நாடு வோரடி பரவச் சூர்கள் பாறுமே.

தீஞ்சொ லருண கிரிசதா சிந்தை செய்ச டானனு
ஓஞ்ச ரவண பவநம வோஞ்சி வாய நமகுகா
ஓஞ்ச ரவண குருபரா வோந மோந மவெனுமின்
பாஞ்சு சீலர் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே.

## திருத்தணிகைமலை

### பண் - பஞ்சமம்

பொன்னு ரங்க டாங்கு கொங்கைப் பூவையர் மையலிலே
பன்னு ளும்பட் டீழை கொண்டு படுவனஞ் சேர்முன்னே
தென்னூர் வண்டு பாடு தெய்வத் தணிகை நெடுங்கிரிவாழ்
மன்னூர் ஞானச் சேய்செம் பாத மலரை வணங்குதுமே.

கூனி யாடிக் கோல நூன்றிக் குறுகி நடந்திளைஞர்
பானெ கிழ்ந்த கஞ்சி யுண்டு படுவனஞ் சேர்முன்னே
தானி யார்த்தச் செல்வர் சேருந் தணிகை நெடுங்கிரிவா
ழானி யற்ற சேய்செம் பத்ம வடியை வணங்குதுமே.

உண்ணீ ரன்னஞ் செல்ல லின்றி யுயிரு ளடங்குமுனே
தண்ணீ ரென்று முள்ள வண்மைத் தணிகை நெடுங்கிரிவாழ்
தெண்ணீர் மைச்சு ரேசன் சந்தத் தெருள னிறைஞ்சியகோன்
கண்ணீ ராள ரன்பன் பாத கமலம் வணங்குதுமே.

## திருச்செங்கோடு

### பண் - நட்டராகம்

நீரு லாநெடு வேணியன் மேல்விழி நின்றெழு சுடராகிச்
சீரு லாம்வர கங்கைப டிந்தறு தெரிவையர் முலையுண்டே
யேரு லாமுரு வம்பல காட்டிமெய் யிறைவியின் பாலருந்திச்
சூரி லான்மலை சென்றவ னுலையஞ் சுடர்திருச் செங்கோடே.

இரவி யேழ்பசுங் கொய்யுளை சந்திர னிரதமென் பவைகளிலும்
நிருதி வாயுகு பேரனு தாசன னீரிறை யிந்திரன்மா
தரும னீடுகைம் மாக்களி லும்பல சாரி புரிந்தகுகன்
கருது வார்க்கருள் செய்பதி நன்மணங் கமழ்திருச் செங்கோடே.

மாறி லாக்கஜ நாயகி தன்னைநன் மணம்புரிந் திந்திரற்கோ
ரூறி லாமுடி சூட்டுபு வள்ளியை யுவப்பொடு கைப்பிடித்துக்
காறி லாப்புகழ் பாடிய வெங்கையின் கருத்தினை நிறைவேற்றி
யீறி லாதொளிர் கின்றவ னன்கிருப் பதுதிருச் செங்கோடே.

## கழுகுமலைபாதி கந்தகிரிபாதி

### தக்கராகம் பண் - கொல்லிக்கௌவாணம்

உலகவெம்மைக் கடல்கடக்கு முறுதியினைத் தாராய்
கலகமிகந் தவர்கருதுங் கழுகுமலை முருகா
விலகலற்ற விருத்தியெற்கு விரைவிலினி தளியாய்
பலகவிஞர் பரசுகந்த பருவதத்துப் பரமே.

வருதாவெல் லாங்களைதி மனதினிமைப் போர்க்கும்
கருதார்க்குங் களிப்புதவுங் கழுகுமலை முருகா
வொருதாழ்வுஞ் சொலவிசையா வுவப்பிலெனை வையாய்
கிருதார்த்த ருள்குகந்த கிரியிருக்குங் கிளியே.

குருப்புகழர் விரும்புமருட் கூந்தினென்னை யாட்டாய்
கருப்புகழர் காணரிய கழுகுமலை முருகா
வருப்புகழர் நாடறிவி லனவரத மெனைவை
திருப்புகழர் புகழ்ந்தகந்த சிகரியுறை சிவமே.

## மெய்ம்மார்க்க விளக்கம்

### பண் - கொல்லி

நீரகம் பெருகு நாக நிருபனூர் சுதைவார்க் கொங்கைப்
பீரகங் குளிர மாந்திப் பிரமனூர் சிரசிற் குட்டி
யேரகத் தமர்ந்த தேவை யிகனிசி சரரைக் காய்ந்த
தீரனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே.

மாவலை யரிக்கு நேமி வழங்கிய தணிகைச் சேயைக்
கோவரர் பதியை ஞானக் குழவியைக் குமர வேளை
யாவியர் தேவா வானை யறிஞர்க ளகத்திற் றாங்குந்
தேவனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே.

காய்சரு கருந்து முவ்வோர் கருத்தினுக் கிசைந்து ளானை
யோய்வறு புகழ்சொன் ஞேன்சொல் லொருவனைப்புறம்பாமார்க்கப்
பேய்கடா முணராச் சூரைப் பெருஞ்சிவ யோகர் பேணுஞ்
சேய்தனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே.

திருவகுப்பு

மெத்த மெத்த வக்ர மத்தின்
மெத்த மெத்த விக்ர மத்தின்
மெத்த மெத்த வுக்ர வெற்றி மிருபாசமே

விட்டு விட்டு றுக்கு றுக்கு
கட்டு கட்டு குத்து குத்து
வெட்டு வெட்டெ னச்சி னத்து நமனுடியே

சத்த மிட்ட தட்டி நெட்டெ
யிற்றி னைக்க டித்து றுக்கு
தர்க்க மிட்டெ னைப்பி டிக்க வருபோதிலே

தத்த ளிக்கு புத்தி யைத்தி
டப்ப டுத்தி யொத்தி டத்த
ணிப்பு றுத்தி மெய்த்து ணைக்கு வரவேணுமே

எத்த லத்து மெப்ப திக்கு
மெப்ப டிக்கு மெச்ச ரித்து
நற்ப தத்தை யுச்ச ரிக்கு நினைவாகியே

இட்டம் வைத்த வர்க்க நுக்ர
கச்ச முத்ர வித்தை யிற்ப்ர
சித்த நித்ய முத்த மிழ்க்கு மருள்போதனே

அத்ர பத்ர சித்ர மிட்ட
யிற்ப டைத்த யிற்கி ணைத்த
லர்க்க ணுற்ற பொற்கு றத்தி மணவாளனே

அத்த னுக்கு மைக்கி தத்த
புத்ர சித்தி முத்தி யைச்செ
யற்பு தச்சி வக்கி ரிக்குள் முருகேசனே.

கந்தரலங்காரம்

**பே**ற்றைத் தவஞ்சற்று மில்லாத வென்னைப்ர பஞ்சமென்
சேற்றைக் கழிய வழிவிட்ட வாசெஞ் சடாடவிமேல் [னுஞ்
ஆற்றைப் பணியை யிதழியைத் தும்பையை யம்புலியின்
கீற்றைப் புனைந்த பெருமான் குமாரன்க்ரு பாகரனே.

பெரும்பைம் புனத்தினுட் சிறறேனல் காக்கின்றபேதைகொங்கை
விரும்புங் குமரனை மெய்யன்பி னன்மெல்ல மெல்லவுள்ள
அரும்புந் தனிப்பர மாநந்தந் தித்தித் தறிந்தவன்றே
கரும்புந் துவர்த்துச்செந் தேனும் புளித்தறக் கைத்ததுவே.

நீலச் சிகண்டியி லேறும் பிரானெந்த நேரத்திலுங்
கோலக் குறத்தி யுடன்வரு வான்குரு நாதன்சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்தறி வார்சிவ யோகிகளே
காலத்தை வென்றிருப் பார்மரிப் பார்வெறுங் கர்மிகளே.

முடியாப் பிறவிக் கடலிற் புகார்முழு துங்கெடுக்கு
மிடியாற் படியில் விதனப் படார்வெற்றி வேற்பெருமாள்
அடியார்க்கு நல்ல பெருமாள் அவுணர் குலமடங்கப்
பொடியாக் கியபெரு மாள்திரு நாமம் புகல்பவரே.

சிந்திக் கிலேனின்று சேவிக் கிலேன்றண்டைச் சிற்றடியை
வந்திக் கிலேனொன்றும் வாழ்த்து கிலேன்மயில் வாகனனைச்
சந்திக் கிலேன்பொய்யை நிந்திக்கி லேன்உண்மை சாதிக்கி
புந்திக் கிலேசமுங் காயக் கிலேசமும் போக்குதற்கே. [லேன்

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காவெனு நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்செங் கோடன் மயூரமுமே.

படிக்கின் றிலைபழ நித்திரு நாமம் படிப்பவர்தாள்
முடிக்கின் றிலைமுரு காவென் கிலைமுசி யாமலிட்டு
மிடிக்கின் றிலைபர மாநந்த மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின் றிலைநெஞ்ச மேதஞ்ச மேது நமக்கினியே.

கோடாத வேதனுக் கியான்செய்த குற்றமென் குன்றெறிந்த
தாடாள னேதென் தணிகைக் குமரநின் றண்டையந்தாள்
சூடாத சென்னியு நாடாத கண்ணுந் தொழாதகையும்
பாடாத நாவு மெனக்கே தெரிந்து படைத்தனனே.

காட்டிற் குறத்தி பிரான்பதத் தேகருத் தைப்புகட்டின்
வீட்டிற் புகுதன் மிகவெளி தேவிழி நாசிவைத்து
மூட்டிக் கபாலமூ லாதார நேரண்ட மூச்சையுள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கு மோடாமற் சாதிக்கும் யோகிகளே.

வணங்கித் துதிக்க அறியா மனித ருடனிணங்கிக்
குணங்கெட்ட துட்டனை யீடேற்று வாய்கொடி யுங்கழுகும்
பிணங்கத் துணங்கை யலகைகொண் டாடப் பிசிதர்தம்வாய்
நிணங்கக்க விக்ரம வேலா யுதந்தொட்ட நிர்மலனே.

மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியிற்
சேலார் வயற்பொழிற் செங்கோட னைச்சென்று கண்டுதொழ
நாலா யிரங்கண் படைத்தில னேயந்த நான்முகனே.

காவிக் கமலக் கழலுடனே சேர்த்தெனைக் காத்தருளாய
தூவிக் குலமயில் வாகனனே துணை யேதுமின்றித்
தாவிப் படரக் கொழுகொம் பிலாத தனிக்கொடிபோற்
பாவித் தனிமனந் தள்ளாடி வாடிப் பதைக்கின்றதே.

## கந்தரந்தாதி

உண்ணா முலையுமை மைந்தா சரணம் பரருயிர்சேர்
உண்ணா முலையுமை மைந்தா சரண மருணைவெற்பாள்
உண்ணா முலையுமை மைந்தா சரணந் தனமுமொப்பில்
உண்ணா முலையுமை மைந்தா சரணஞ் சரணுனக்கே.

திருவாவி னன்குடி பங்காள ரெண்முது சீருரைச
திருவாவி னன்குடி வானோர் பரங்குன்று சீரலைவாய்
திருவாவி னன்குடி யேரகங் குன்றுதொ றாடல்சென்ற
திருவாவி னன்குடி கொண்டதண் கார்வரை செப்புமினே.

தினைவேத் தியன்பு செய் வேந்தன் பதாம் புயத்திற்பத்திவுந்
தினைவேத் தியமுகந் தேற்றினர் மாற்றினர் பாற்றினந்தீத்
தினைவேத் தியர்நெறி செல்லாத விந்தியத் தித்திபினத்
தினைவேத் தியங்குயிர் கூற்றுரினூசிடுஞ் சீயுடம்பே.

சேயவன் புந்தி வனவாச மாதுடன் சேர்ந்த செந்திற்
சேயவன் புந்தி கனிசா சராந்தக சேந்தவெண்ணிற்
சேயவன் புந்தி பனிப்பானு வெள்ளிபொன் செங்கதிரோன்
சேயவன் புந்தி தடுமாறவே தருஞ் சேதமின்றே.

தீட்டப் படாவினி யுன்னலென் சென்னி கறைப்பிறப்பில்
தீட்டப் படா வியவரல்லன் யான்றிக்கு நான்மருப்புத்
தீட்டப் படா விதமுகாசலன் சிறை விட்டவன்றாள்
தீட்டப் படாவி வனையே நினைவன்றிசாமுகனே.

செல்வந் திகழு மல நெஞ்சமே யவன் றெய்வமின்னூர்
செல்வந் திகழு நமதின்மை தீர்க்கும்வெங் கூற்றுவற்குச் •
செல்வந் திகழுந் திருக்கையில் வேறினை காத்த செல்வி
செல்வந் திகழு மணவாள னல்குந் திருவடியே.

## திருத்தோடையல்

அனந்தமறை யுன்னறிவாய் விளங்கவென
வாறுமுக வடிவே காட்டித்
தனந்தனியா வந்தசிவ சரவணனே
பிரணவனே சாமீ யுன்றன்
மனங்கனிய யாரெழுகும் வகையையுணர்ந்
தெனையறிய வரமீந் தென்னைக்
கனம்படவும் வைப்பதுநின் கடனேயேன்
றனுதினமுங் கருதா நின்றேன்.

அகத்தியனக் கிரனனி தவத்தினுயர்
நாரதனல் லருளே பெற்று
மிகுத்ததிருப் புகழ்புகன்ற கருத்துளனு
மேனையவுண் மெய்யோ ரெல்லாம்
மகத்துவமுற் றுய்யவடி யளித்தசிவ
னேயெழில்கொண் மயிலி லேறும்
பகத்தரள மேயுனது பதப்போது
பழிச்சவருள் பண்ணு யெற்கே.

அண்டமுத லணுக்கடையாய்க் கண்டசரா
சரங்களெலா மருளா முன்றன்
பண்டமெனத் தெரிதலினு லுனக்கிவணு
னிசைக்கவொரு பரிசுங் காணேன்

கொண்டதமி யேன்வணக்கந் தனைத்திருத்தி
யாகவிங்கே கொள்வா யென்று
அண்டிநின்றே னின்னடிக்கே பொலம்பொலிந்த
வயில்சிகண்டிக் கரசே யன்றே.

நின்னடித்தொண் டானதிரு மாலாதி
தேவரெல்லா நின்க டைக்கண்
தன்னருளைக் கொண்டலவோ சருவநவ
சித்திகளுந் தடத்த மாக
இன்னமிருந் தாற்றிடவு மிகல்படைத்தா
ரேரயிற்கை யீசா வுன்றன்
நன்னயப்பொன் னடித்துணைகொ ளென்போல்வார்
நலமெனென நவில்வேன் மன்னே.

பிரமனைத்தாள் கொண்டுதைத்தாய் பிரணவத்தின்
பொருளானாய் பிறைமா கங்கை
திருமுடிக்கண் ணணியுமுக்கட் கடவுளுக்கு
முபதேசஞ் செய்தா யிந்த்ரன்
பருவரலை நீக்கியருந் துறக்கமளித்
தாய்விபுதர் பதியே யார்க்குங்
குருகுகனென் றணிமறைகள் குயிலும்வண
மெனக்குமருள் குயிற்றென் றோயோ.

தமருகத்தை மூவிலையை யெழிற்பிணையைப்
பிடித்ததிருச் சயமா தேவன்
அமர்கயிலைப் பதியெமக்குத் திருக்கோயி
லென்னினுமெம் மடியார் நெஞ்சே
எமதிருப்பென் றெஞ்ஞான்று மிருந்தெங்கு
மேநிறைந்த விறையே யிந்தக்
குமரகுரு தாசனைக்கை விட்டுவிடா
டற்காத்துக் கோடி யன்றே.

## கந்தரநுபூதி

ஆடும் பரிவே லணிசே வலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியா னைசகோ தரனே.

உல்லாச நிராகுல யோக விதச்
சல்லாப விநோதனு நீ யலையோ
எல்லாமற என்னை யிழந்த நலஞ்
சொல்லாய் முருகா சுரபூ பதியே.

வானோ புனல்பார் கனல்மா ருதமோ
ஞானோ தயமோ நவில்நான் மறையோ
யானோ மனமோ எனையாண் டவிடந்
தானோ பொருளா வதுசண் முகனே.

வளைபட் டகைம் மாதொடு மக்க ளெனுந்
தளைபட் டழியத் தகுமோ தகுமோ
கிளைபட் டெழுசூ ருரமுங் கிரியுந்
தொளைபட் டுருவத் தொடுவே லவனே.

மகமாயை களைந்திட வல்ல பிரான்
முகமாறு மொழிந்து பொழிந் திலனே
அகமாடை மடந்தைய ரென் றயருஞ்
சகமாயை யுள்நின்று தயங் குவதே.

தூசா மணியுந் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகளந் துகளா யினபின்
பேசா அநுபூதி பிறந் ததுவே.

[illegible] லதாய்
[illegible] யொளியாய்க்
[illegible] விழியாய்க்
[illegible] குகனே.

## வேல் விருத்தம்

மகரமளறிடைபுரள உரககண பணமவுலி
மதியுமிர வியுமலையவே
வளரெழிலி குடருழல இமையவர்கள் துயரகல
மகிழ்வுபெறு மறுசிறையவாஞ்
சிகரவரை மனமுருகு தொறுநுளைய மகளிர்செழு
செநெல்களொடு தரளமிடவே
செகசிரப கிரதிமுத னதிகள்கதி பெறவுததி
திடரடைய நுகரும் வடிவேல்
தகரமிரு கமதமென மணமருவு கடகலுழி
தருகவுளு முறுவளெயிறுந்
தழைச்செவியு நுதல்விழியு முடையவொரு கடவுள்
தருதுணைவ னமரர்குயிலுங் [மகிழ்
குகரமலை யெயினர்குல மடமயிலு மெனவிருவர்
குயமொடமர் புரியுமுருகன்
குமரனறு முகனெதிரும் விருதுநிசி சரரணிகள்
குலையவிடு கொடியவேலே.

## மயில் விருத்தம்

சந்தான புஷ்பபரி மளகிண் கிணீமுகச்
சரணயுக ளமிர்தப்ரபா
சந்த்ரசே கரமூஷி காரூட வெகுமோக
சத்யப்ரி யாலிங்கனச்

சிந்தா மணிக்கலச கரகட கபோலத்ரி
யம்பக விநாயகன்முதற்
சிவனைவலம் வருமளவி லுலகடைய நொடியில்வரு
சித்ரக் கலாபமயிலாம்

மந்தா கிநிப்ரப வதரங்க விதரங்க
வனசரோ தயகிர்த்திகா
வரபுத்ர ராஜீவ பரியங்க தந்திய
வராரலன் குலிசாயுதத்

திந்த்ராணி மங்கில்ய தந்தூரக்ஷா பரண
இகல்வேல் விநோதனருள்கூ
ரிமையகிரி குமரிமக னேறுநீ லக்ரீப
ரத்நக் கலாபமயிலே.



# குமாரஸ்தவம்



ஓம் ஷண்முகபதயே நமோநம:
,, ஷண்மதபதயே நமோநம:
,, ஷட்க்ரீவபதயே நமோநம:
,, ஷட்கிரீடபதயே நமோநம:
,, ஷட்கோணபதயே நமோநம:
,, ஷட்கோசபதயே நமோநம:
,, நவநிதிபதயே நமோநம:
,, சுபநிதிபதயே நமோநம:
நரபதிபதயே நமோநம
,, ஸுரபதிபதயே நமோநம:
,, நடச்சிவபதயே நமோநம:

ஓம் ஷடக்ஷரபதயே நமோநம:
,, கவிராஜபதயே நமோநம:
,, தபராஜபதயே நமோநம:
,, இஹபரபதயே நமோநம:
,, புகழ்முநிபதயே நமோநம:
,, ஜயஜயபதயே நமோநம:
,, நயநயபதயே நமோநம:
,, மஞ்சுளபதயே நமோநம:
,, குஞ்சரீபதயே நமோநம:
,, வல்லீபதயே நமோநம:
,, மல்லபதயே நமோநம:
,, அஸ்தரபதயே நமோநம:
,, சஸ்தரபதயே நமோநம:
,, ஷஷ்டீபதயே நமோநம:
,, இஷ்டிபதயே நமோநம:
,, அபேதபதயே நமோநம:
,, ஸுபோதபதயே நமோநம:
,, வியூஹபதயே நமோநம:
,, மயூரபதயே நமோநம:
,, பூதபதயே நமோநம:
,, வேதபதயே நமோநம:
,, புராணபதயே நமோநம:
,, பிராணபதயே நமோநம:
,, பக்தபதயே நமோநம:
,, முக்தபதயே நமோநம:
,, அகாரபதயே நமோநம:
,, உகாரபதயே நமோநம:
,, மகாரபதயே நமோநம:
,, விகாசபதயே நமோநம:
,, ஆதிபதயே நமோநம:
,, பூதிபதயே நமோநம:
,, அமாரபதயே நமோநம:
,, குமாரபதயே நமோநம:

## பரஞ்சுடர்க்கண்ணி

ஆரணமு மாகமமு மங்கிங் கெனாதுபரி
பூரணமாச் சொல்லும் பொருளே பரஞ்சுடரே.

எப்பா ருளாரு மிறைஞ்சும் பலமதங்கட்
கப்பா லிருக்கு மறிவே பரஞ்சுடரே.

என்று மருவாக வென்று முருவாக
என்றுங் குருவா யிருக்கும் பரஞ்சுடரே.

இருவினைக் கட்டொழிந்த வேகாந்த மோன
குருபர மாயசிவக் குன்றே பரஞ்சுடரே.

மூவுலகு மெச்சு முசுகுந்த னக்கிர
தேவனுய்ய நல்லருள்செய் தேவே பரஞ்சுடரே.

அடியா மருளை யடைந்தவடி யாருட்
குடியா யிருக்குங் குகனே பரஞ்சுடரே.

பாவிற்று வாழ்பவர்போற் பாடாது பாடுநர்தந்
நாவிற் குடியிருக்கு நட்பே பரஞ்சுடரே.

சீராருஞ் செல்வத் திருவடிக்கா ருண்ணியவோம்
வாரா துணர்வும் வருமோ பரஞ்சுடரே.

பெண்சாதி பிள்ளையெனும் பித்தேறிச் சாகாமற்
கண்சாடை செய்தே கடத்தாய் பரஞ்சுடரே.

பெண்ணோக்க மென்னும் பிசாசம் பிடித்தலைத்துப்
புண்ணாக்கா வண்ணம் புரப்பாய் பரஞ்சுடரே.

முக்கால முந்தெரிந்து மோன மதுவருந்தற்
கெக்கால முந்துணையா யெய்தாய் பரஞ்சுடரே.

இந்திரியப் பேய்க ளெனைத்தொந் தரிக்காமல் .
சந்ததமு நன்னாட்டந் தாராய் பரஞ்சுடரே.

### பொன்மயிற்கண்ணி

சொல்லரிய சின்மயமாச் சொல்லவுள்ள பூரணமாம்
வல்லவனை நான்கூடி வாழ்வேனோ பொன்மயிலே.

அயிலைப் பிடித்தானை யம்பரமாள் கோனைக்
கயிலைப் பதியானைக் காண்பேனோ பொன்மயிலே.

தேடக் கிடையாத செல்வமுடை யானையினிக்
கூடிநனி வாழ்வேனோ கூறாய்நீ பொன்மயிலே.

சித்திரத்தி னும்பொறிக்க வொண்ணாத திருவழகைச்
சித்தத்தி னாலணைந்தாற் றீருமோ பொன்மயிலே.

வருவானோ வாரானோ வென்னுமோ ஐயம்
கருகவொரு நிச்சயந்தான் காட்டாயோ பொன்மயிலே.

கட்டிக்கொள் வேனெனவே கைப்பரிச மிட்டதுரை
எட்டிப்பா ராதிருப்ப தென்னேயோ பொன்மயிலே.

கட்டழக னெங்கோன் கமல சரணானை
எட்டிப் பிடிக்கவகை யில்லையோ பொன்மயிலே.

தேவாதி தேவன் சிவஞான தேசிகனை
வாவென் றழைத்துவர மாட்டாயோ பொன்மயிலே.

திக்கனைத்தும் போற்றவுள்ள சித்தாந்த முத்தையற்குப்
பக்குவப்பட் டேனெனநீ பன்னாயோ பொன்மயிலே.

வேலைப் பிடித்தசெங்கை வேந்தை யழைக்கவென்றன்
காலைப் பிடித்தேனென் காதலாற் பொன்மயிலே.

பொன்னாசை பெண்ணாசை பூவாசை நாடேனீ
என்னாசை நாதற் கியம்பிடாய் பொன்மயிலே.

இன்பக் கடல்படிந்த வெந்தை யருணகிரி
அன்புக் கிசைந்தவனை யாளவுரை பொன்மயிலே.

## குருபரக்கண்ணி

பூவேறு கோனும் புரோகிதனும் புங்கவரும்
நாவார வாழ்த்து நலமே குருபரனே.

அண்டபகி ரண்ட மடங்கவொரு பூரணமாக்
கண்டபொரு ணீயேயென் கண்ணே குருபரனே.

எல்லாரு நல்லகதி யெய்தவென்று மாமறைகள்
சொல்வதுபோ னானுமிங்கே சொன்னேன் குருபரனே.

மாசற்ற வுன்னைவிட்டு மண்ணைகளை யேவணங்கற
காசைப் படுவோ ரதிகங் குருபரனே.

தீபந் தனையேற்றிச் செங்கைகுவிப் பார்களருட்
டீப மிருக்குதில்லை தேரார் குருபரனே.

எங்கு மிருக்குமென்பா ரின்னவித மென்றறியார்
அங்கிங் கெனவே யலைவார் குருபரனே.

சின்னாட் டொழுதுவினைச் சேர்வாற் றுயருறுகால்
உன்னைவிட்டு நிற்பவரு முண்டே குருபரனே.

செல்வமிருந் தால்வணங்கிச் செல்வமொழிந் தால்விடு
ஒல்குமிடை வேசியரை யொப்பார் குருபரனே. [வோர்

கண்டிறுமாப் புற்றிருக்கக் காட்டலரு ளென்னுமொழி
கண்டேனென் மட்டிலதைக் காணேன் குருபரனே.

என்னடியார்க் கெஞ்ஞான்று மின்னலழி வேதெனநீ
சொன்னசொல் வீணாமோ சொல்லாய் குருபரனே.

சிந்தித்த வெல்லாஞ் சிவஞான தேசிகமாப்
பந்தித்து வைக்கவருள் பண்ணாய் குருபரனே.

அண்ண லருணகிரி யன்புக் கிரங்கியவோர்
தண்ணளிதந் தாளெனையுந் தாய்போற் குருபரனே.

## பகைகடிதல்

திருவளர் சுடருருவே சிவைகர மாருருவே
அருமறை புகழுருவே யறவர்க டொழுமுருவே
இருடபு மொளியுருவே யெனைநினை யெனதெதிரே
குருகுகண் முதன்மயிலே கொணர்தி யுனிறைவனையே.

மறைபுக ழிறைமுனமே மறைமுதல் பகருருவே
பொறைமலி யுலகுருவே புனநடை தரு முருவே
இறைவிள முகவுருவே யெனைநினை யெனதெதிரே
குறைவரு திருமயிலே கொணர்தி யுனிறைவனையே.

இதரர்கள் பலர்பொரவே பிவணுறை யெனதெதிரே
மதிரவி பலவெனதேர் வளர்சரணிடை யெனமா
சதுரொடு வருமயிலே தடவரை யசைவுறவே
குதிதரு மொருமயிலே கொணர்தி யுனிறைவனையே.

பவநடை மனுடர்முனே படருரு வெனதெதிரே
நவமணி நுதலணியோர் நகைபல மிடறணிமால்
சிவணிய திருமயிலே திடனொடு நொடியலமே
குவலயம் வருமயிலே கொணர்தி யுனிறைவனையே.

அழகுறு மலர்முகனே யமரர்கள் பணிகுகனே
மழவுரு வுடையவனே மதிநனி பெரியவனே
இழவில ரிறையவனே யெனநினை யெனதெதிரே
குழகது மிளிர்மயிலே கொணர்தி யுனிறைவனையே.

கருணை பெய்கனமுகிலே கடமுனி மனிமுதலே
அருணை யனரனென வேயகநினை யெனதெதிரே
மருமலரணி பலவே மருவிடு களமயிலே
குருபல வவிர்மயிலே கொணர்தி யுனிறைவனையே.

---

[குறிப்பு :—இப்பகுதியை பத்தியுடன் பாராயணஞ் செய்வோர் செவ்வேளை மயில்மீது தெரிசிப்பர். ஐயமின்று.]

## சண்முக நாமாவளி

| | | | |
|---|---|---|---|
| ஹரஹர | சிவசிவ | சண்முக | நாதா |
| ஹரஹர | சிவசிவ | வெண்முக | நாதா |
| ஹரஹர | சிவசிவ | பரம | விலாசா |
| ஹரஹர | சிவசிவ | வபய | குகேசா |
| அருண | கிரிபரவு | மருணெறி | நாதா |
| கரும | வுறுவர்புகழ் | சததள | பாதா |
| அரிபிர | மாதிக | டொழு | வடிவேலா |
| திருவடி | நாரவ | ருளமுறை | சீலா |
| எணிணிய | குருநிக | மெணுமதி | யீசா |
| சனனவெய் | தறவளி | கருபர | மேசா |
| பாசா | பாச | பாப | விநாசா |
| மாசே | ருத | மான | நடேசா |
| போஜா | வாஜா | பூஜகர் | நேசா |
| தேஜா | ராஜா | தேவஸ | மாஜா |
| நீருநகவை | யருளொரு | திருவா | ரமுதே |
| ஓருசர | வணபவ | வுருவே | யருவே. |

## பெரியசாமி வணக்கம்

**க**ங்கை வார்கிடைக் கடவுள் சேயெனுங்
கந்த வேள்சய கீய சவ்விய

புங்கன் மாணவ கருளேம் பாதகம்புரிந்த
வோர் மனு டற்கி ரங்கியப்

பங்கம் வீட்டிமுன் கொண்ட துண்டெனப்
பகரன் மெய்யெனி லெளிய னேனமும்

மங்க மாய்த்தருள் புரிவை யேயருள்
வரத சாகரப் பெரிய சாமியே.

சிந்திற் குந்தனு வாவிக் குந்தடச்
சிகரிக்குஞ் சிறு திடருக்குங் கடத்
தந்திக்குங் குழைப்ப ன்றிக்கும் வியன்
றாழ்வெம் மட்டம் மட்டெடற்கு நின்னருள்
சிந்திக்கும் பெரியர்க்கு முண்டி திற்
சிறிய' னுய்யுமா றெங்ங னெற்கினி
வந்திக்கும் முனை யன்றித் திக்கிலை
வரத சாகரப் பெரிய சாமியே.

அனலிக்கும் மினும்பு முவுக்கும் மலய
சத்துக்குங் குழை யளக்கர்க் குஞ்சுக
பனுவுக்கும் பிறமறை கட்கும் முள்ள
மாற்ற மெம் மடங்கம் மடங்கருட்
டனுவர்க்குஞ் சிறியவ னுக்குஞ் சொலத்
தடையொர ற்பமு மிலையுனைப் பணி
மனமுற்றுங் கொனுந்தளர் வுற்றேய்வன் கொல்
வரத சாகரப் பெரிய சாமியே.

அரிய புத்தியின் மிருக மொப்பவிங்
கருந்தலும் பொருந்தலு மின்பா மெனத்
திரியுன் மத்தரைப் பொருவ நிற்பணி
சிரியனுந் திரிந்திடி னருட்டி றன்
விரிமதர்ப் பினர்பொலி வியக்க மெவ்
விதமுறுஞ் சுகமு தவு நல்லருள்
வரியளித்தருள் புரிதி யொப்பி லென்
வரத சாகரப் பெரிய சாமியே.

சுடரின் மேலு மெழுந்துப் பாச்சியஞ்
சொரிய வஃதவிந் திடுவதுண் டெனின்
விடய மோகமு ந்தம சுளேற்கற
விதியுண்டா மெனப் புகற லாமைய

கடவுளா யநின் கருணை நோக்க
மென் கண்ணினுந் தடையாகு மேற்றொடர்
மடமை விடவு மிடனுண்டோ சொல்லு
வரத சாகரப் பெரிய சாமியே.

ஈச போற்றி நன்னேச போற்றி
யெம்மிறைவ போற்றி யெம்பெரும போற்றிசூர்
நாச போற்றி மெய்ப்போச போற்றி
யோர்நாத போற்றி யென்றோதும் வாய்ப்புடைத்
தாச ரேத்த ருளுசலப் பெயர்ச்
சாது பாத்தலொ வுனைப் புணர்
மாசி லாக்கதி வேண்டு மாண்டருள்
வரத சாகரப் பெரிய சாமியே.

## திருக்கந்தர் திருப்பல்லாண்டு

### பண் - பஞ்சமம்

பொன்னுயர் நாட்டிறை புத்திரி தனைமன்றல்
புரிந்துசெங் கினைகாத்த
மின்னினை மாமணஞ் செய்தரு ளுடிய
வித்தகர் தமையாண்டு
நன்னல நல்கருள் வேங்கெதன விளங்குபு
நான்மறை களுர்விரித்துப்
பன்னரும் பரமென விருக்குநந் தேவுக்குப்
பல்லாண்டு கூறுதுமே.

மூப்பறு கட்டிள மைத்திரு மேனியு
மூப்புடை யார்க்கெல்லாம்
மூப்புடை மேன்மையு மூப்புடை யாவிகண்
முழுவது மூப்பிளமை

யாப்பறு மாறெமை யாள்கும ராவென
நாடிறை மையுமல்கு
பாப்பனை யான்மரு மானெனும் வேலற்குப்
பல்லாண்டு கூறுதுமே.

அன்னையின் மேம்படு கருணையி னுங்குக
னடிகளைப் புகழ்தாசன்
தன்னைமெய் யடியவ னுக்கவென் றகம்புறநே
சார்ந்துவந் தேற்றமதி
சொன்னவ னையனு பூதிசொன் னவற்குறு
கூறாத தெவராலும
பன்னவொ ணைநல நல்கிய குகனுக்குப
பல்லாண்டு கூறுதுமே.

## கட்டியம்

ராஜாதி ராஜ ராஜ பரமேச்வர குமார பகவானுக்கு ஜய
தேவாதி தேவ தேவ பரமேச்வர சிவஸ [illegible] நாயகனுக்கு ஜய
ஸ்ரீவல்லி தேவசேனா சமேத சர்வ சுப லக்ஷணனுக்கு ஜய
ஞான சக்திதர ஞானப்பிரகாச சுவாமிக்கு ஜய
குக்குடத் துவஜ ஹஸ்த வஜ்ர பாணிக்கு ஜய
மயூரவாகன மகாகிருபாநிதிக்கு ஜய
அருணகிரிநாத ஆனந்த பராபரனுக்கு ஜய
மஹாதேஜோமண்டலததாரைக்காத்தருள் கடவுளுக்கு ஜய.



| | | | |
|---|---|---|---|
| ஓம் புஷ்கரஸ்ருஜகம்டாயநம : | கண்டம் | பூஜயாமி | கழுத்து |
| ,, ஷண்முகாயநம : | முகானி | ,, | முகம் |
| ,, ப்ரிதபாவநாயநம : | சுபுகம | ,, | மோவாய்கட் |
| ,, வேத ஜிஹ்வாயநம : | ஜிஹ்வாம் | ,, | நாக்கு [டை |
| ,, பஸ்மோதூளித விக்ரஹாயநம : | தந்தான் | ,, | பற்கள் |
| ,, மகேஸ்வராயநம : | ஒஷ்டம் | ,, | உதடு |
| ,, புருஷஸ்ரேஷ்ட ஸுநாஸநாயநம : | நாஸிகா | ,, | மூக்கு |
| ,, ஹிரண்யகுண்டல கர்ணாயநம : | கர்ணவ | ,, | காது |
| ,, புண்ய மூர்தயேநம : | ஸ்ரவணேநி | ,, | கேட்டல் |
| ,, த்விஷண்ணேத்ர கமலலோசநாயநம : | நேதரே | ,, | கண்கள் |
| ,, த்ரிலோக ஜனகாயநம : | ப்ருவவ | ,, | புருவம் |
| ,, கஸ்தூரி திலகாஞ்சித பாலநேத்ர ஸுதாயநம : | லலாடானி | ,, | நெற்றி |
| ,, திரிலோக குரவேநம : | ஸிராம்ஸி | ,, | சிரசு |
| ,, கம்காதர ஸுதாயநம : | மகுடம | ,, | கிரீடம் |
| ,, வேதஸுரோ வேத்டாநம : | ஊர்ததானம் | ,, | உச்சி |
| ,, பாலக்ரஹொச்சாடந ஸேநாபதயேநம : | ஸர்வாம்காநி | ,, | ஸர்வாங்கம் |

# ஸ்ரீ ஷண்முக அஷ்டோத்தரசத நாமார்ச்சனை

## அங்கந்யாஸ :

ஓம் அஸ்யஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய அஷ்டோத்தரசத ஸ்தோத்ர மாலிகா மஹாமந்த்ரஸ்ய-ப்ரஹ்மாருஷி: அநுஷ்டுப்சந்த: ஸுப்ரஹ்மண்யோதேவதா - சரஜந்மாக்ஷட இதிபீஜம் - சக்திதரோக்ஷய கார்த்திகேய இதிசக்தி: க்ரௌஞ்சதர இதிகீலகம் - சிகிவாஹந இதிகவசம் - ஷண்முகாட இதித்யாநம் - ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய ப்ரஸாத ஸித்யர்த்தே ஜபே விநியோக:

ஓம், சம் ஓங்காரஸ்வரூபாய ஓஜோதராய ஓஜஸ்விநே நமஸ்ஸம் ஹ்ருதாய இஷ்டசித்தாத்மநே பாஸ்வரரூபாய அங்குஷ்டாப்யாம்நம:

ரம் ஷட்கோண மத்யநிலயாய ஷட்கிரீடதராய ஸ்ரீமதே ஷடாதாராய தர்ஜநீப்யாம்நம:
வம் ஷண்முக சரஜந்மநே சுபலக்ஷணாய சிகிவாஹநாய மத்யமாப்யாம்நம:
ணம் க்ருசாநு ஸம்பவாய கவசிநே குக்குடத்வஜாய அநாமிகாப்யாம்நம:
பம் கந்தர்ப்பகோடி திப்யமாநாய த்விஷட் பாஹவே த்வாதசாக்ஷாய கநிஷ்டிகாப்யாம்நம:
வம் கேடதராய கட்கிநே சக்திஹஸ்தாய கரதல கரப்ருஷ்டாப்யாம்நம:

ஓம், சம் ஓங்காரஸ்வரூபாய ஓஜோதராய ஓஜஸ்விநே நமஸ்ஸம் ஹ்ருதாய இஷ்டசித்தாத்மநே பாஸ்வரரூபாய ஹ்ருதயாயநம:

ரம் ஷட்கோணமத்ய நிலயாய ஷட்கிரீடதராய ஸ்ரீமதே ஷடாதாராய சிரஸேஸ்வாஹா:
வம் ஷண்முக சரஜந்மநே சுபலக்ஷணாய சிகிவாஹநாய சிகாயை வௌஷட்:
ணம் க்ருசாநு ஸம்பவாய கவசிநே குக்குடத்வஜாய கவசாயஹும்:
பம் கந்தர்ப்பகோடி திப்யமாநாய த்விஷட் பாஹவே த்வாதசாக்ஷாய நேத்ரத்ரயாய வௌஷட்:
வம் கேடதராய கட்கிநே சக்திஹஸ்தாய அஸ்த்ராய பட்:
ஓம் பூர்புவஸ்ஸுவரோமிதி திக்பந்த:

# த்யாநம் ॥

கநககுண்டலமண்டிதஷண்முகம
வநஜராஜவிராஜிதலோசநம் ।
நிசிதசஸ்த்ரசராஸநதாரிணம
சரவணோத்பவசம்புஸுதம்பஜே

1. ஓம் அசிந்த்யசக்தயேநம:
2. ,, அக்நிபுவேநம:
3. ,, அவ்யக்தலக்ஷணாயநம:
4. ,, ஆபத்விநாசகாயநம:
5. ,, இபவக்த்ராநுஜாயநம:
6. ,, இந்த்ரவந்திதாயநம:
7. ,, ஈடநீயாயநம:
8. ,, ஈசபுத்ராயநம:
9. ,, உதாரகீர்த்தயேநம:
10. ,, உதாரதியேநம:
11. ,, ஊர்த்வகதிதாயநம:
12. ,, ருஷிதேவகணஸ்துதாயநம:
13. ,, ருசயேநம:
14. ,, லுளிதோத்தாரகாயநம:
15. ,, லூதபவபாசப்ரபஞ்ஜநாயநம:
16. ,, ஏணாங்கதரஸத்புத்ராயநம:
17. ஐச்வர்யதாயநம:
18. ஓம் ஓஜஸ்விநேநம:
19. ,, ஔதார்யசீலாயநம:
20. ,, ஔஷதாகராயநம:
21. ,, அம்சுமதேநம:
22. ,, அம்பிகாதநயாயநம:
23. ,, க்ருத்திகாஸுதாயநம:
24. ,, குமாராயநம:
25. ,, க்ரௌஞ்சதாரணாயநம:
26. ,, குக்குடத்வஜாயநம:
27. ,, கலாதராயநம:
28. ,, கட்கிநேநம:
29. ,, கட்வாங்கிநேநம:
30. ,, கேசரீஜநபூஜிதாயநம:
31. ,, காங்கேயாயநம:
32. ,, குஹாயநம:
33. ,, கச்யபப்ரியாயநம:
34. கூர்ணிகாக்ஷாயநம:

35. ஓம் கநவிகரமாயநம :
36. ,, சிந்மயாயநம :
37. ,, சாதிதாநகாயநம :
38. ,, சவிச்சதாயநம :
39. ,, ஜகநாதாயநம :
40. ,, ஜகதஸாக்ஷிணேநம :
41. ,, சஞ்சாநிலமஹாவேகாயநம :
42. ,, ஜ்ஞாநமூர்த்தயேநம :
43. ,, ஜ்ஞாநமஹாநிதயேநம :
44. ,, டங்காரநருதயவிபவாயநம :
45. ,, டமரபரபவாயநம :
46. ,, டக்காநாதபரீசிராயநம :
47. ,, ததவஜ்ஞாயநம :
48. ,, தாரகாரயேநம :
49. ,, ஸ்திதாயநம :
50. ,, ஸ்திராயநம :
51. ,, தயாபராயநம :
52. ,, தாதரேநம :
53. ,, தவிஷட்புஜாயநம :
54. ,, தவிஷ்காணாயநம :
55. ,, தநதசூசேசவராயநம :
56. ,, தேவஸேநேசாயநம :
57. ,, தாமபராயநம :
58. ,, தருதவரதாயநம :

59. ஓம் நிதயதருபதாயநம :
60. ,, நிதயாநந்தாயநம :
61. ,, புளிநதகநயாரமணாயநம
62. ,, பரபரஹமணேநம :
63. ,, பருதுபராகரமாயநம :
64. ,, பணிவராயநம :
65. ,, பணிலோகவிபூஷணாயநம :
66. ,, பருஹதருபாயநம :
67. ,, பரஹமேசவிஷ்ணுருபாயநம :
68. ,, பாலருபாயநம :
69. ,, பஹுருபாயநம :
70 ,, பஹுதைதயவிநாசநாயநம :
71. ,, பவாயநம :
72 ,, பகதஸுபரியாயநம :
73. ,, பகவதேநம :
74. ,, மஹாஸேநாயநம :
75 ,, மஹாமாயிநேநம :
76. ,, மஙகளபரதாயநம :
77. ,, முகதிதாதரேநம :
78. ,, யசஸகராயநம :
79 ,, யோகிநாமவராயநம :
80. ,, ரமணீயாயநம :
81. ,, ரதநகுணடலமணடிதாயநம :
82. ,, லோகைகநாதாயநம :

83. ஓம் லீலாவதேநம :
84. ,, வரதாயநம :
85. ,, வைத்யாயநம :
86. ,, வாகீசாயநம :
87. ,, விச்வரூபாயநம :
88. ,, விசூர்காயநம :
89. ,, சரஜந்மநேநம :
90. ,, சக்திதராயநம :
91. ,, சிகிவாஹநாயநம :
92. ,, சங்கராயநம :
93. ,, சிவாயநம :
94. ,, ஷண்முகாயநம :
95. ,, ஷட்கிரீடதரஸ்ரீமதேநம :
96. ஓம் ஷடாதாரர்யநம :
97. ,, ஸ்கந்தாயநம :
98. ,, ஸுப்ரஹ்மண்யாடநம :
99. ,, ஸர்வஜ்ஞாயநம :
100. ,, ஸத்யஸங்கல்பாயநம :
101. ,, ஸ்வயம்ஜோதிஷேநம :
102. ,, ஸ்வயம்புவேநம :
103. ,, ஸச்சிதாநந்தாயநம :
104. ,, ஸர்வதேவமயாயநம :
105. ,, ஸர்வவிக்நவிநாசநாயநம :
106. ,, ஹிரண்மயாயநம :
107. ,, க்ஷேமதாடநம :
108. ,, க்ஷேமங்கர குமாரபரமேச்வராயநம :

## ஸ்ரீ தேவஸேனா அஷ்டோத்தரம்

1. ஓம் தேவஸேனாயைநம :
2. ,, பீதாம்பராயைநம :
3. ,, உத்பலதாரிண்யைநம :
4. ,, ஜ்வாலிந்யைநம :
5. ,, ஜ்வலநரூபாயைநம :
6. ,, ஜ்வாலநேத்ராயைநம :
7. ,, ஜ்வலத்கேஸாயைநம :
8. ,, மஹாவீர்யாயைநம :
9. ,, மஹாப்லாயைநம :
10. ஓம் மஹாபோகாயைநம :
11. ,, மஹேஸ்வர்யைநம :
12. ,, மஹாபூஜாயைநம :
13. ,, மஹோந்நதாயைநம :
14. ,, மாஹேந்த்ராயைநம :
15. ,, இந்த்ராண்யைநம :
16. ,, இந்த்ரபூஜிதாயைநம :
17. ,, ப்ரஹ்மாண்யைநம :
18. ,, ப்ரஹ்மஜனன்யைநம :

19. ஓம் ப்ரஹ்மரூபாயைநம :
20. ,, ப்ரஹ்மாநந்தாயைநம :
21. ,, ப்ரஹ்மபூஜிதாயைநம :
22. ,, ப்ரஹ்மஸ்ருஷ்டாயைநம :
23. ,, வைஷ்ணவ்யைநம :
24. ,, விஷ்ணுரூபாயைநம :
25. ,, விஷ்ணுபூஜ்யாயைநம :
26. ,, திவ்யஸௌந்தர்யைநம :
27. ,, திவ்யாநந்தாயைநம :
28. ,, திவ்யபங்கஜதாரிண்யைநம :
29. ,, திவ்யாபரணபூஷிதாயைநம :
30. ,, திவ்யசந்தனலேபிதாயைநம :
31. ,, முக்தாஹாரவக்ஷஸ்தலாயைநம :
32. ,, வாமலம்பகராயைநம :
33. ,, மஹேந்த்ரதனயாயைநம :
34. ,, மாதங்ககந்யாயைநம :
35. ,, மாதங்கலப்தாயைநம :
36. ,, அசிந்த்யசக்தயேநம :
37. ,, அசலாயைநம :
38. ,, அக்ஷராயைநம :
39. ,, அஷ்டைஸ்வர்யஸம்பந்நாயைநம :
40. ,, அஷ்டமங்களாயைநம :
41. ,, சந்த்ரவர்ணாயைநம :
42. ,, கலாதராயைநம :
43. ஓம் அம்புஜவதநாயைநம :
44. ,, அம்புஜாக்ஷ்யைநம :
45. ,, அசுரமர்தநாயைநம :
46. ,, இஷ்டஸித்திப்ரதாயைநம :
47. ,, ஷிஷ்டபூஜிதாயைநம :
48. ,, பத்மவாஸிந்யைநம :
49. ,, பராத்பராயைநம :
50. ,, பரமேஸ்வர்யைநம :
51. ,, பரஸ்யைநிஷ்டாயைநம :
52. ,, பரமாநந்தாயைநம :
53. ,, பரமகல்யாண்யைநம :
54. ,, பாபவிநாஷின்யைநம :
55. ,, லோகாத்யக்ஷாயைநம :
56. ,, லஜ்ஜாட்யாயைநம :
57. ,, லயங்கர்யைநம :
58. ,, லயவர்ஜிதாயைநம :
59. ,, லலநாரூபாயைநம :
60. ,, ஸௌராத்யக்ஷாயைநம :
61. ,, தர்மாத்யக்ஷாயைநம :
62. ,, து : ஸ்வப்நநாஷிந்யைநம :
63. ,, துஷ்டநிக்ரஹாயைநம :
64. ,, ஷிஷ்டபரிபாலநாயைநம :
65. ,, ஐஸ்வர்யாயைநம :
66. ,, ஐராவதவாஹநாயைநம :

[redacted]

[illegible]

# ஸ்ரீ குமாரதேவர்

திருவாய்மலர்ந்தருளிய

# சாஸ்திரக்கோவை.

இதோடு மெய்ப்படியார் அருளிச்செய்த

பெரியநாயகியம்மை பதிகமும்,

ஸ்ரீ சிதம்பரசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

குமாரதேவர் நெஞ்சுவிடுதூதும்,

குமாரதேவர் பதிகமும்

சேர்க்கப்பட்டுள்ளன.




இவை

திருத்துருத்தி இந்திரபீடம் கரபாத்திர [சுவாமிகள்]

ஆதீனத்திற்குரிய

ஈசூர்-சச்சிதானந்த சுவாமிகள்

மாணாக்கர்களிலொருவராகிய

ஆறுமுகமுதலியாரவர்களால்

பிரதிகளைக்கொண் டாராய்ச்சிசெய்வித்த பிரதிக்கிணங்க,

சென்னை,

பூமகள்விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1914.

இதன் விலை அணா-.0.